

# வீட்டின் பாதுகாப்பிற்கு

# பாதுகாப்பான சமையலுக்கு



சமையல் கியாஸ் ஸ்டவ் (LPG கியாஸ் அடுப்பு) தரக் கட்டுப்பாட்டுக்கு உட்படவில்லை என்றால் அது மிகவும் ஆபத்தானது. தரக் கட்டுப்பாடுகளுக்காக முன்பு ISI என்ற பெயர் கொண்ட பியூரோ ஆப் இந்தியன் ஸ்டாண்டார்ட்ஸ் (BIS) அமைப்பானது, கியாஸ் ஸ்டவ் அடுப்புகளுக்காக மிகக் கடுமையான தர அளவுக் குறிப்புகளை நிர்ணயித்து, அதன் மூலம் கியாஸ் ஸ்டவ் அடுப்புகள் மிகவும் பாதுகாப்பாக இருக்க வழிவகை செய்துள்ளது.

அதனால்தான் கியாஸ் சிலிண்டர்களை விநியோகம் செய்யும் IOC, BP மற்றும் பல சிறந்த நிறுவனங்கள், பாதுகாப்பு நலன் கருதி ISI முத்திரை உள்ள கியாஸ் ஸ்டவ் அடுப்புகளையே அங்கீகரித்து அவற்றையே சிபாரிசும் செய்கின்றன.

SS பிரிமியர் கியாஸ் ஸ்டவ் அடுப்புகள் ISI அமைப்பின் மிகக் கடுமையான தரக் கட்டுப்பாட்டு சோதனைகளை வெற்றிகரமாகக் கடந்து ISI முத்திரையைப் பெற்ற பிறகே விற்பனைக்கு வருகின்றன.

ஏனென்றால் உங்கள் பாதுகாப்பில் எங்களுக்கு அக்கறை உண்டு.

**SS பிரிமியர் கியாஸ் ஸ்டவ் சிறப்பு அம்சங்களைப் பாருங்கள்.**

- துருப்பிடிக்காத பித்தளை பர்னர்கள் மூலம் பாத்திரத்தைச் சுற்றிலும் தீ ஜுவாலைகள் ஒரே சீராகப் பரவுகின்றன.
- மிகத் துல்லியமாக மோல்டு செய்யப்பட்ட நாடுகள் (குமிழ்) தீயை முற்றிலுமாக அணைத்துவிடுகின்றன.
- ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஃபிரேம் கீழே மறைவாக உள்ள கனெக்டர் பைப்புகள், குறிப்பிட்ட சிறந்த தரமான உலோகங்களால் தயாரிக்கப்பட்டவை.
- வழிவதைத் தாங்கும் தட்டுகள் (spill trays).
- ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஃபிரேம், மிக உயர்ந்த தரமான ஸ்டீல் பயன்படுத்தித் தயாரிக்கப்பட்டதாகும்.

விற்பனைக்குப் பிந்தைய எங்களுடைய சேவை, உடனடியாகச் செயல்படுவதற்கும், தரமான சேவைக்கும், குறித்த காலத்தில் தேவைகளை நிறைவேற்றுவதற்கும் புகழ் பெற்றதாகும்.

சிறிதே விலை குறைவான, மலிவான தயாரிப்பை வாங்கி, உங்கள் பாதுகாப்பை விட்டுக் கொடுப்பீர்களா? அது உங்களுக்கே ஆபத்து அல்லவா?

ISI முத்திரை கொண்ட, பாதுகாப்பான பிரிமியர் தயாரிப்பையே வாங்குங்கள்.



# பிரிமியர்
## கியாஸ் ஸ்டவ்

TAS VISION P 626/00



"கோபாலபுரத்துக் கூர்காவாகி விட்டார் வாழப்பாடி!" - ஒரு திகர் அட்டாக்!

பக்: 92



காவேரியின் கிராமம்

பக்: 89

பக்: 54



ஜெ.வுக்குத் தெரியுமா ஆறுலட்சத்தின் பின்னணி?



கம்சாராணி பராக்! பராக்!

பக்: 8

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



# கட்டெறும்பு ஜோக்குகள்!

“ஒரு யானையை ஃபிரிட்ஜிக்குள்ளே எப்படி வைப்பார்கள்?”

“வேறு எப்படி? ஃபிரிட்ஜ் கதவைத் திறந்துதான்”

“ஒட்டகத்தை, எப்படி ஃபிரிட்ஜுக்குள்ளே வைப்பார்கள்?”

“கதவைத் திறந்துதானே?”

“ஊகூம்... கதவைத் திறந்து, உள்ளே இருக்கும் யானையை வெளியில் எடுத்துவிட்டு, அப்புறம் தானே வைக்க முடியும்?

“சரி! இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுங்கள். காட்டில் எல்லா மிருகங்களையும், ஒரு மீட்டிங்கிற்கு அழைத்ததாம் சிங்கம். அந்த மீட்டிங்கிற்கு, ஒட்டகம் மட்டும் போகவில்லையாம். ஏன்?”

“தெரியலையே!”

“ஒட்டகம்தான் ஃபிரிட்ஜுக்குள்ளே இருக்கே?”

இப்படி அடுக்குமாடி கணக்காய் 'கடி' ஜோக் சொல்லிக்கொண்டே போனவர் நாலு வயது ஸ்மிதி!

விட சில சமயம் அப்படியொரு வெறுப்பு வந்தது. உதாரணத்திற்கு:

ஐந்நூறு ரூபாய் நோட்டில் காந்திஜி ஏன் சிரிச்சுக்கிட்டிருக்கார்?”

“அழுதா நோட்டு நனைஞ்சிடுமே!”

“ரஜினிகாந்த், சென்னையிலிருந்து டெல்லிக்கு, கன்யாகுமரி வழியாகத்தான் போவார். ஏன்?”

“அவர் வழி தனி வழி! அதனால்தான்”

சுஜாதா பேசும்போது, “நல்ல நகைச்சுவை எழுத்துக்கு எஸ்.வி.வி., தேவன், கல்கி ஆகியோரை உதாரணமாகச் சொல்லலாம். இன்று கழுதை தேய்ந்து கட்டெறும்பானது போல, நல்ல நகைச்சுவை என்பது கடிஜோக் லெவலுக்கு வந்துவிட்டது! என்னைக் கேட்டால் ஒரு ஆறு மாத காலத்துக்கு, கடி ஜோக்குகளைத் தடை பண்ண வேண்டும் என்பேன்” என்றார்.

கடி ஜோக்குகளை ஒதுக்கினாலும் நல்ல பல ஜோக்களும் சொல்லப்பட்டன.

ஒரு டாக்டர் கொடுத்த சீட்டை எடுத்துக்கொண்டு, மருந்துக்கடைகள் ஏறி, ஏறி அலுத்துப் போனவர், மறுபடி டாக்டரிடம் வந்து, “என்ன மருந்து எழுதிக் கொடுத்திருக்கீங்க? எந்தக் கடையில போய்க் கேட்டாலும் இல்லைன்னு சொல்றாங்களே!” என்றார்.

சீட்டை வாங்கிப்பார்த்த டாக்டர் “அடப்பாவி! இது மருந்துச் சீட்டே இல்லை! என் பேனா எழுதுகிறதான்னு நான் கிறுக்கிப் பார்த்த பேப்பர் ஆச்சே!” என்றார்.

ஹியூமர் கிளப்பின் திருவல்லிக்கேணி கூட்டத்தில்தான் இந்தக் கடிகளை எழுத்தாளர் சுஜாதா முன்பு இலவசமாக வழங்கினார் அவர்.

சாஹித்யா என்ற சிறுமி சொன்னது : “ஔவையார் ஓட்டலுக்குப் போனால், சர்வர் அவரிடம் என்ன கேட்பார்?”

“ஔவையே! சுட்ட இட்லி வேணுமா? சுடாத இட்லி வேணுமா?”

அப்புறம் வந்தவர்களும் கடி ஜோக்குகளை அள்ளி

ஒரு ஓட்டலில் சாப்பிட்டவரை பில்லுக்குப் பணம் இல்லாமல் மாவாட்டச் சொல்லி விட்டார்கள். அவர் மாவாட்டிக் கொண்டிருந்தபோது, அங்கே வந்த முதலாளி, அவரையே சில நிமிடங்கள் உற்றுப் பார்த்துவிட்டு, “நீங்க ஒரு எழுத்தாளரா?” என்று கேட்டதும், அவருக்கு ஒரே ஆச்சரியம்.

“எப்படி கரெக்டா கண்டுபிடிச்சீங்க?”

“நீங்க, அரைத்த மாவையே அரைப்பதை வைத்துத்தான்!”

பல்வேறு வகையான நகைச்சுவைகளை ரகம் பிரித்துக் காட்டினார் சுஜாதா. "ஆங்கிலம் - தமிழ் வார்த்தைகளை வைத்து (உதாரணம்: மேல்துண்டு, female துண்டு ரகம்) ஜோக்கடிப்பது மலிந்து விட்டது. இதையும் தடை செய்ய வேண்டும். இன்று குழந்தைகள் தமிழில் பேசுவது அரிதாகிவிட்டது. இங்கே சில குழந்தைகள் நன்றாகத் தமிழ் பேசி, ஜோக் சொன்னதைப் பாராட்ட வேண்டும்" என்றார். அந்தச் சிறுமிகளுக்கு ஹியூமர் கிளப் சார்பில் பரிசும் தரப்பட்டது. தம் வாழ்க்கையில் ஏற்பட்ட நகைச்சுவையான அனுபவங்களையும் நினைவு கூர்ந்தார் சுஜாதா:




“ஒரு தடவை, நான் வேலை பார்த்த நிறுவனத்தில் ரெக்ரூட்மெண்ட்டுக்கான இண்டர்வியூவில், ஒரு கேள்விக்குப் பதில் சொல்லத் தயங்கினான் ஓர் இளைஞன். "ம்... கோ அஹெட்!" என்றேன். உடனே எழுந்து புறப்பட்டு விட்டான். அவனை மறுபடி கூப்பிட்டு, 'உன் இண்டர்வியூ இன்னும் முடியவில்லை. உட்கார்' என்று சொல்லி அடுத்த கேள்விக்குப் போனேன்.

"ஒரு இளைஞனிடம், அவன் பெயர், அப்பா பெயர், ஹாபி என்று வழக்கமான கேள்விகளைக் கேட்டேன். அவன், தனது ஹாபி மேஜிக் செய்வது, ஆரிகமி இரண்டும் என்றான். ஆரிகமி என்றால் என்ன என்றபோது, "காகிதங்களை மடித்து உருவங்கள் செய்யும் ஜப்பானியக் கலை என்று சொல்லிய கையோடு ஒரு காகிதத்தை இப்படியும் அப்படியும் மடித்து, ஒரு பறவை போல ஆக்கி, அதன் வால் பகுதியைப் பிடித்து இழுக்க, அது இறக்கைகளை ஆட்டியது. அனைத்து இன்டர்வியூ போர்டு மெம்பர்களும் ஆச்சரியம் அடைந்தோம். அடுத்து ஒரு நாணயத்தை வாங்கி கையிலே வைத்து மூடிக் கொண்டு, மறுபடி திறந்தால், நாணயத்தைக் காணோம். என் சகாவின் கோட்டுக் காலரிலிருந்து, நாணயத்தை எடுத்துக் கொடுத்தான். மறுபடி ஆச்சரியம். 'எப்படி நாணயத்தை மறைய வைத்து, மறுபடி வரவழைத்தாய்?' என்று கேட்டேன்.

'எனக்கு வேலை கொடுங்கள்; சொல்லித் தருகிறேன்' என்றான்.

"அந்தப் புத்திசாலிக்கு வேலை கிடைத்தது. ஆனால் சீக்கிரமே விட்டுவிட்டு அமெரிக்கா போய்விட்டான்!"

- எஸ். சந்திரமௌலி



ஒரிசாவின் நந்தன் கண்ணன் உயிரியல் பூங்காவில் பலியான,
பன்னிரண்டு புலிகளும், இடநெருக்கடி காரணமாகவே வினோதத்
தொற்று நோயால் விரைந்து தாக்கப்பட்டுள்ளன என்ற உண்
மையை ஆறுபேர் கொண்ட நிபுணர்குழு உறுதி செய்திருக்கிறது.
சென்னை வண்டலூர் அறிஞர் அண்ணா உயிரியல் பூங்காவில்
உள்ள புலிகளின் நிலை என்ன? அவற்றை எப்படி பராமரிக்
கிறார்கள்? உயிரியல் பூங்காவின் இயக்குனர் கிருஷ்ண குமாரைச்
சந்தித்துக் கேட்டோம்.

"புலிகளை 'சாலிட்டரி அனிமல்' என்று அழைப்பார்கள்.
— அதிகத் தனிமையை விரும்பக்கூடிய விலங்கு. இன
விருத்திக்காக மட்டுமே இருபால் புலிகளும் சேர்ந்து திரியும்.

பிறகு பிரிந்து விடும். பாலூட்டுதல் நின்று விட்டால் குட்டிகளும் பிரிந்துவிடும். புலிக்குத் தன்னம்பிக்கை அதிகம். அத னால் தனியாகச் சென்று வேட்டையாடு வதையே புலிகள் விரும்புகின்றன. நந்தன் கண்ணன் பூங்காவில் இறந்து போன புலிகளை 'டிரைபனோ சோமியாஸிஸ்' என்னும் வினோத தொற்றுநோய்க் கிருமி தாக்கியுள்ளது. இந்தக் கிருமிகள், சாதாரண ஈக்கள் மூலம் பரவியுள்ளன. சுற்றுச் சூழல், மாமிசம் போன்றவற்றில் உற்பத்தி யாகும் கிருமிகளை விரைவாக கடத்தக் கூடியவை இந்த ஈக்கள். இடநெருக்கடி இருந்தால் கேட்கவே வேண்டாம். விரை வில் பரவிவிடும். இதுதான் நந்தன் கண் ணன் பூங்காவில் நடந்திருக்கிறது" என்ற வரிடம், "இங்கே எத்தனைப் புலி கள் உள்ளன. அவற்றை எப்படிப் பரா மரிக்கிறீர்கள்" என்றோம்.

"லட்சுமிகாந்த், லட்சுமணா என்ற இரண்டு ஆண் புலிகளும், சொப்னா, வல்லி, தேவி ஆகிய மூன்று பெண் புலி களும், மொத்தம் ஐந்து புலிகள் உள்ளன. இந்தப் புலிகளுக்கு இரண்டரை ஏக்கர் பரப்பளவில் ஒரு குட்டிக் காடும், முக்கால் ஏக்கர் பரப்பளவில் ஒரு குட்டிக் காடும் உருவாக்கி, அதிலேயே தனித்தனி புலி வீடுகளை உருவாக்கி இருக்கிறோம்.

புலி ஒன்றுக்கு பத்து கிலோ மாட் டிறைச்சியை ஒவ்வொரு நாளும் கொடுக் கிறோம். காட்டில் வசித்தபோது, விதவித மான மாமிசங்களைச் சாப்பிட்டிருக்கும் என்பதால் திங்கள், வியாழன் ஆகிய இரண்டு நாட்களும் கோழி இறைச்சி கொடுக்கிறோம். இறைச்சியைக் கொடுப் பதற்கு முன், அதில் போதுமான வைட்ட மின் உள்ளதா? வேறு வைரஸ்கள் இருக் கிறதா என்பதை பரிசோதனைக் கூடத்தில் சோதித்து அறிந்தபிறகே கொடுக்கிறோம்.

கொழுப்புச் சத்து அதிகமுள்ள இறைச்சி உண்பதால் வயிற்றில் ஏற்படும் நாடா புழுவை ஒழிக்க, மூன்று மாதத்திற்கு ஒரு முறை பூச்சி மருந்து கொடுக்கிறோம்.

கழிவுநீரை உடனுக்குடன் அகற்ற கால்வாய் வசதி, சுடுதண்ணீரில் மஞ் சள் தூள் போட்டு, புலி வீடுகளை தினமும் சுத்தம் செய்கிறோம். புலிகள் சாப்பிடும் பாத்திரங்கள் உடனுக்குடன் சுத்தம் செய்யப் படுகின்றன. புலிகளைக் கண் காணிக்கவும், அவற்றுக்குச் சிகிச்சை அளிக்கவும் தனியே மருத்துவர் குழு இல்லாவிட்டா லும், இதய நோய், அறுவை சிகிச்சை உள்ளிட்ட அனைத்து அவசரத் தேவைகளுக்கும் மருத்து வர்கள் உள்ளனர்." என்று கூறிய இயக்குனர், "இங்குள்ள சொப் பனா என்ற பெண் புலியின் 'மரபணுவில்' வெள்ளைப்புலிக்குண்டான குரோமசோம் கள் உள்ளன. விரைவில் ஒரு வெள்ளைப் புலி பிறக்கும் என்று ஆவலோடு எதிர் பார்க்கிறோம்" என்றும் தெரிவித்தார்.

# வண்டலூர் ஜூவில் வெள்ளைப்புலி!



- லியோ



• நைலாவில் கிளின்டன்

• மோகினி குப்தா

# சகோதரர் கிளின்டன்!

அமெரிக்க அதிபர் கிளின்டன், அந்த கிராமத்துக்கு விசிட் அடித்துவிட்டுப் போய் மூன்று மாதங்கள் ஓடிவிட்டன. ஆனாலும், அந்த கிராமத்துப் பெண்களால் கிளின்டனை மறக்க முடியவில்லை. அதுதான் ராஜஸ்தான் மாநிலம், ஜெய்ப்பூரிலிருந்து இருபத்தி இரண்டு கி.மீ. தூரத்தில் உள்ள நைலா கிராமம்.

அந்தக் கிராமத்தின் திறந்த வெளி மைதானத்தில், கிராமத்துப் பெண்கள் பூத்தூவி வரவேற்க, கிளின்டன் தன் சூப்பர் செக்யூரிட்டி வளையத்தை விலக்கி விட்டு, கிராமத்துப் பெண்களுடன் நடனமாடியதையும், மகிழ்ச்சியுடன் கைகுலுக்கியதையும் இன்றும் அவர்கள் நினைத்து நினைத்துப் பூரிக்கிறார்கள்.

கிளின்டன் கையில் 'ராக்கி' கட்டி, அவரைச் சகோதரர் ஆக்கிக் கொண்ட பெண்மணி மோகினி குப்தாவுக்கு இன்று கிராமத்தில் தனி மரியாதை! பஸ்ஸில் சென்றால், 'அவர் அமெரிக்க அதிபரின் சகோதரியாச்சே' என்று சொல்லி உட்கார எழுந்து இடம் தருகிறார்களாம்! கிளின்டன் வருகையின் நினைவாக, அமெரிக்கச் சின்னம் பதிக்கப்பட்ட பார்க்கர் பேனா இவருக்குத் தரப்பட்டது. அதைப் பொக்கிஷமாய்ப் பாதுகாக்கிறார் மோகினி.

இந்த கிளின்டன் கிராமத்து(?!) மக்களைக் காண வரும் உறவினர்கள், கிளின்டன் என்ன செய்தார்? என்ன பேசினார்? என்று இன்னமும் கேட்கிறார்கள் ஆவலுடன். கிளின்டன் வந்து போனபின் சில வாரங்களுக்கு ஊரைப் பார்த்துவிட்டுப் போக நிறைய டூரிஸ்ட்கள் வந்து கொண்டிருந்தனர். இப்போது டூரிஸ்ட் வருகை நின்று விட்டது.

கிளின்டன் வருகைக்கான ஏற்பாடுகளை கவனிக்க, இங்கு வந்த மாநில கல்வி அமைச்சரிடம் முறையிட்டதையடுத்து, இந்தக் கிராமத்தின் எட்டாம் வகுப்பு வரையிலான பள்ளிக்கூடம் பத்தாம் வகுப்பு வரை உயர்த்தப்பட்டிருக்கிறது.

இந்தக் கிராமத்தை ஒரு டூரிஸ்ட் கிராமமாக்கத் திட்டமிட்டது மாநில அரசு. ஆனால் இதற்கு உள்ளூர் மக்கள் மத்தியில் பலத்த எதிர்ப்பு. "எங்கள் ஊர் அழகும், கலாசாரமும் டூரிஸ்ட்களால் கெடுவதை நாங்கள் அனுமதிக்க மாட்டோம்!" என்று கூறிவிட்டார்களாம்!

- எம்

# கம்சாராணி பறாக் பறாக்!

ஒரு கிராமப் பஞ்சாயத்துத் தலைவராக பதவியில் அமர்ந்த இரண்டரை மாத காலத்தில் ரூபாய் அறுபது லட்சத்து எழுபதாயிரம் மதிப்பீட்டில் கிராம மேம்பாட்டுப் பணிகளை நிறைவேற்ற முடியுமா? முடியும் என்று நிரூபித்திருக்கிறார் கம்சாராணி என்ற முப்பத்தைந்து வயதுப் பெண்மணி.

இது எங்கோ கேரளத்திலோ மேற்கு வங்கத்திலோ நடந்த நிகழ்ச்சியல்ல. சென்னை மகாபலிபுரம் சாலையில் உள்ள சிட்லபாக்கம் என்ற கடற்கரை கிராமத்தில் நடந்த, நடந்து கொண்டிருக்கும் உண்மை நிகழ்ச்சி.

ஆயிரத்தில் ஒருவன் படம் பார்த்து, எம்.ஜி.ஆருக்கும்; ஜெயலலிதாவுக்கும் விசிறியாக மாறிய கம்சாராணி, கடந்த பதினைந்து வருடங்களாக அ.தி.மு.க.வில் தீவிர உறுப்பினராம். கடந்த மூன்று மாதங்களுக்கு முன்பு வரை மீன் வியாபாரம் செய்து கொண்டிருந்த இவருக்கு இரண்டு பெண்கள், ஒரு பிள்ளை.

பன்னிரண்டு வருடத்திற்கு முன்பு, புயல் சுழன்றடித்த ஒரு மழை நாளில் கடலுக்குப் போன கணவரை அலைகள் எடுத்துக் கொள்ள, தனியொரு மனுஷியாய் மீன் கூடை சுமந்து, மூத்த பெண்ணுக்குத் திருமணம் செய்து வைத்திருக்கிறார். வாசலில் போடும் கோலத்தை அடிக்கடி வந்து அழித்து விட்டுப் போகும் அலையோரத்து குடிசையில் வசித்தாலும், மற்ற இரண்டு பிள்ளைகளையும் ப்ளஸ்டு படிக்க வைத்துக் கொண்டிருக்கிறார், ஐந்தாம் வகுப்பு வரை படித்த கம்சாராணி. குடும்பச் சுமை ஒருபுறம் இருக்க, கிராமத்தில் தமது கட்சி நடவடிக்கைகளிலும், மீனவர் சங்கச் செயல்பாடுகளிலும் ஆர்வத்தோடு தம்மை இணைத்துக் கொண்டு பணியாற்றியிருக்கிறார். "கம்சாவா...? சொன்னதைச் செய்வாடி!" என்று குப்பத்துப் பெண்கள் மத்தியில் இவருக்கு ரசிகர் மன்றம் வைக்காத குறையாக ஆதரவு பெருகியிருக்கிறது.

இவரது செல்வாக்கைக் கவனித்த மேலிடம் இவரை கொட்டிவாக்கம் ஒன்றியக் கழகத்தின் பிரதிநிதியாக உயர்த்தியிருக்கிறது. இப்படித்தான் மெல்ல மெல்ல, தன் உழைப்பால் கொட்டிவாக்கம் பஞ்சாயத்துப் போர்டு தலைவியாக உயர்ந்திருக்கிறார்.

இவர் பஞ்சாயத்துத் தலைவியானதே ஒரு விறுவிறுப்பான உண்மைக் கதை. 1996-ஆம் ஆண்டு நடந்த உள்ளாட்சி மன்றத் தேர்தலில், தமது கொட்டிவாக்கம் குப்பத்து மக்களின் வேண்டுகோளை ஏற்று, வார்டு உறுப்பினருக்குப் போட்டியிட்ட கம்சாராணிக்கு அமோக வெற்றி. மொத்தம் பதினைந்து உறுப்பினர்களைக் கொண்ட பஞ்சாயத்து போர்டுக்கு ஒன்பது அதிமுக உறுப்பினர்களும், நான்கு திமுக உறுப்பினர்களும், இரண்டு த.மா.க. உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். அதிமுகவைச் சேர்ந்த ராஜாராம் என்பவர் பஞ்சாயத்துத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். தேர்தலுக்குப் பிறகு நடந்த முதல் கிராம சபைக் கூட்டத்திற்கு வார்டு உறுப்பினர்கள் எல்லாரும் கட்டாயம் வந்து விட வேண்டும், துணைப் பஞ்சாயத்து தலைவரை, வார்டு உறுப்பினர்கள் கூடி நாளை தேர்ந்தெடுப்பார்கள் என்று கம்சாவிற்கு தகவல் வர, மறுநாள் கொண்டு சென்ற மீன்களை அவசர அவசரமாக விற்று விட்டு, கூட்டத்திற்கு நேரமாகி விட்டதே என்று மீன் கூடையோடு, நேரே பஞ்சாயத்துக் கட்டடத்திற்கு வந்து விட்டார். பதினான்கு உறுப்பினர்களும் சேர்ந்து, பஞ்சாயத்துத் துணைத் தலைவராக கம்சாவைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

நம் மீது இத்தனை நம்பிக்கை வைத்திருக்கிறார்களா? என்று சந்தோஷத்தில்

விழி விரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார். கொடுத்த பொறுப்பில் திறம்படச் செயல்பட வேண்டுமே என்ற கவலையில் மீன் விற்ற நேரம் போக தினசரி பஞ்சாயத்து அலுவலகத்திற்குப் போய் அங்குள்ள குப்பை வண்டியை ஓட்டி வந்து, தெருவாசிகளின் உதவியுடன் தெருக் குப்பைகளை உடனுக்குடன் அகற்றி விடுவாராம்.

இதற்கிடையில் கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் மீது, ஊழல் உள்ளிட்ட பல்வேறு புகார்கள் வந்ததால், காஞ்சிபுரம் மாவட்ட ஆட்சித் தலைவர், ராஜாராமை பஞ்சாயத்துத் தலைவர் பதவியிலிருந்து நீக்கியிருக்கிறார். இதனால், தொடங்கப்பட்ட அத்தனை கிராம மேம்பாட்டுப் பணிகளும் அப்படியே கிடப்பில் போடப்பட்டு விட்டன. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாத சூழ்நிலையில், கொதித்துப் போன கிராம மக்களும், வார்டு உறுப்பினர்களும் என்ன செய்வது என திகைத்திருக்கிறார்கள். பஞ்சாயத்துத் தலைவர் டிஸ்மிஸ் செய்யப்பட்ட நிலையில், துணைப் பஞ்சாயத்துத் தலைவரையோ, அல்லது உறுப்பினர்களில் ஒருவரையோ பஞ்சாயத்துத் தலைவராகத் தேர்ந்தெடுக்கலாம் என்பதைத் தாமதமாகத் தெரிந்துகொண்ட வார்டு உறுப்பினர்கள், கிராம சபையில் சிறப்புத் தீர்மானம் போட்டுகம்சாராணியைப் பஞ்சாயத்துத் தலைவராகக் கடந்த ஏப்ரல் இருபத்து நான்காம் தேதி தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

எதிர்க்கட்சி வார்டு உறுப்பினர்களும் இவருக்கே வோட்டுப் போட்டிருக்கிறார்கள்!

பதவிக்கு வந்ததும் மீன் கூடையை விசிறி அடித்து விட்டு, மேம்பாட்டுப் பணிகளை வேகவேகமாக முடுக்கி விட்டிருக்கிறார் கம்சா.

புதிய காய்கறி அங்காடி, ரேஷன் கடை, பஞ்சாயத்து அலுவலக மதில்சுவர், சமுதாயக் கூடம், தெருவெங்கும் சோடியம் விளக்குகள், கழிவுநீர்க் கால்வாய், ஐந்து ஆழ்குழாய்க் கிணறுகள், புதிதாகக் குப்பை அள்ள வண்டிகள், சாலைகள் என ரூபாய் அறுபது லட்சம் மதிப்பீட்டில் பணிகளை முடித்திருக்கிறார்.

**ஊ**ருக்காக ஓடி ஓடி உழைத்துக் கொண்டிருக்கும் கம்சா, மீன் வியாபாரத்தை விட்டு விட்டதால், பொருளாதாரக் கஷ்டம் குடும்பத்தை விரட்டியிருக்கிறது. "இதெல்லாம் உனக்கு வேண்டாம், நீ யாவாரத்துக்குப் போம்மா" என்று பிள்ளைகள் திட்டியிருக்கிறார்கள்.

"ஊருக்காகக் கஷ்டப்பட்டா, ஊர் மக்கள் நம்மள விட்டுட மாட்டாங்க" என்று பிள்ளைகளுக்குப் பதில் சொல்லிவிட்டு மேம்பாட்டு வேலை நடக்கும் இடங்களில் நின்று கொண்டிருக்கிறார் கம்சா.

இந்த நெய்தல் ராணிக்கு ஒரு பெரிய்யய ஆசை...

"நானும் பத்து வருசமா அம்மாவை நேராப் பார்த்து அவங்களைத் தொட்டு, ரெண்டு வார்த்தையாவது பேசிப்புடணும்ன்னு நினைக்கிறேன்... அது நடக்கும்ங்களா? நீங்க அழைச்சுக்கிட்டு போறீங்களா?" என்கிறார்! இவரைப் போன்ற மக்கள் தொண்டரையெல்லாம் பார்க்க அதிமுக பொதுச் செயலாளர் ஜெயலலிதாவுக்கு நேரம் இருக்குமா?

**ஜெயந்தன்**

படங்கள் : **வெங்கடேஷ்**



• விழாவில்

# டைரக்டர் பட்டபாடு!

திரையுலக முன்னோடிகளான ஏ.வி.மெய்யப்பச் செட்டியார் எல்.வி.பிரசாத் உட்பட சில திரையுலக முன்னோடிகளைக் கவுரவிக்கும் வகையில் சிறப்புத் தபால் உறை வெளியிடும் விழா அண்மையில் நடந்தது. விழாவில் கிடைத்த சுவாரஸ்யத் தகவல்கள்.

❦ ராஜா சாண்டோ, நிஜமாகவே ஒரு பயில்வான். சினிமா வாய்ப்புத் தேடி பம்பாய்க்குப் போனார். அவரது உடல் வாகைப் பார்த்து திருப்தி அடைந்த ஒரு தயாரிப்பாளர், அவரை ஸ்டுடியோவுக்கு வரவழைத்து, டைரக்டரிடம் அறிமுகப் படுத்தி வைத்தார். மக்களைக் கொடுமைப் படுத்தும் தாதாக்களிடமிருந்து, அவர்களைக் காப்பாற்றும் காட்சி அன்று எடுக்கப் பட்டுக் கொண்டிருந்தது. இவரையும் நடிக்கச் சொல்லிவிட்டார் டைரக்டர். அவ்வளவுதான்! புகுந்து தாக்க ஆரம்பித்துவிட்டார் ராஜா சாண்டோ! நாலைந்து பேருக்கு மூக்கு உடைந்து ரத்தம். ஏழெட்டு பேருக்கு நல்ல அடி! அவரை நார்மலுக்குக் கொண்டுவருவதே, டைரக்டருக்குப் பெரும்பாடு ஆகிவிட்டது.

❦ ஆர். பிரகாஷ், ஒரு பழங்கால டைரக்டர். அவர் 'மீனாட்சி கல்யாணம்' என்று ஒரு படம் எடுத்தார். மதுரைக்குப் போய் படப்பிடிப்பை முடித்துக் கொண்டு, வந்தபின், ஃபிலிமைக் கழுவ, ரஷ் பார்த்தபோது, ஒரு பிரேமில் கூட யாருக்கும் தலையே இல்லை. அப்புறம் ரீ ஷூட்தான்!

❦ ஏவி.எம். செட்டியார், நந்தகுமார் என்ற படம் எடுத்தபோது, பாட்டுப் பாடி நடித்த நடிகையின் சுருதி சரியில்லை. உடனே மும்பையைச் சேர்ந்த ஒரு பாடகியை வைத்து, பாடலைப் பதிவு செய்து, நடிகையை வெறுமனே வாயசைக்கச் செய்து படம் பிடித்துவிட்டார். அது தான் திரையுலக வரலாற்றில் பின்னணி இசையில் பதிவான முதல் பாடல்.

❦ இந்தியாவின் முதல் பேசும்படமான ஆலம் ஆரா தமிழின் முதல் பேசும்படமான காளிதாஸ் தெலுங்கின் முதல் பேசும் படமான பக்தப்பிரகலாதா, இந்த மூன்று படங்களிலுமே நடித்தவர் ஒருவர் உண்டு. அவர்தான் எல்.வி.பிரசாத்!

❦ இந்த விஷயங்களையெல்லாம் சொன்னவர்கள் தியோடர் பாஸ்கரனும், ராண்டார்கையும்.

விழாவில், "சினிமாவில இருக்கிற நமக்கு இதெல்லாம் தெரியலை. சினிமாவுக்கு வெளியில இருக்கிற இவங்களுக்கு இதெல்லாம், தெரிஞ்சிருக்கே" என்று கமலிடம் ஆச்சர்யப்பட்டார் நடிகர் சிவாஜி.

— மானஸா

ஸ்ரீ

|| ஸ்ரீ மாத்ரே நம: ||



குடவாசல் வட்டம் ஸற்குணேசுவரபுரம் (கருவிலி) அருள்மிகு

# ஸ்ரீ ஸற்குணேச்வரர் உடனுறை நாயகி

## ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ அம்பிகைக்கு

# ஏக தின லக்ஷார்ச்சனை

அன்புடையீர்!

ஸ்ரீ அம்மையப்பன் திருவருளுடனும் தங்களைப் போன்ற மெய்யன்பர்களின் ஒத்துழைப்புடனும் ஸ்ரீ கருவிலி நாதர் கோயிலில் பிரதோஷ வழிபாடுகளும், மற்ற பல ஆராதனைகளும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

நிகழும் விக்ரம வருடம் ஆடி 13ம் தேதி வெள்ளிக்கிழமை (28.7.2000) ஆடி வெள்ளியை முன்னிட்டு இறைவனின் உடனுறை நாயகி **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி அம்பிகைக்கு ஏகதின லக்ஷார்ச்சனை** நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. நம் இன்னல் களைய என்றே, அர்ச்சா மூர்த்தியாக எழுந்தருளி அருள்பாலிக்கும் அன்னையை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தின் மூலம் ஆராதித்தால் எல்லா இன்னல்களும், மூவகை தாபங்களும் நீங்கும் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

**எனவே அன்பர்கள் அனைவரும் லக்ஷார்ச்சனையில் பங்கு கொண்டு, அதே தினம் மாலை நடைபெற இருக்கும் சிறப்பு பிரதோஷ வழிபாட்டிலும் கலந்து கொண்டு அருள் பெற வேண்டுகிறோம்.**

லக்ஷார்ச்சனையில் பங்கு பெற விரும்புவோர் முன்னதாகவே கீழ்க்கண்ட கைங்கர்ய சபா முகவரியில் அர்ச்சனை ஒன்றுக்கு ரூ.101/- வீதம் பணம் கட்டி பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

நேரிடையாகப் பங்கு கொள்ள இயலாமல் காசோலை அல்லது மணியார்டர் மூலம் பணம் அனுப்புகின்றவர்களுக்கு அவர்கள் சார்பில் ஸங்கல்ப பூர்வமாக அர்ச்சனை செய்யப்பட்டு, பிரஸாதம் தபாலில் அனுப்பப்படும்.

இங்ஙனம்

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா**

No.18, (New No.32)
டபீர் புதுத் தெரு, கும்பகோணம் - 612001.

3.7.2000

## கீழ்கண்ட முகவரிகளிலும் தொடர்பு கொள்ளலாம்:

**1) ஸ்வாமி ஸச்சிதானந்தா**
அக்ரஹாரம், கருவிலி
ஸற்குணேச்வரபுரம்
PIN-609 501.Ph:(04366) 73800

**2) G.குஞ்சிதபாதம், ஆடிட்டர்**
**G. நடேசன் & கோ**
கும்பகோணம்-612001
போன்: (0435) - 420 047
- 424860

**3) S. தயாளன்**
90,பேட்டை நாணயக்காரத் தெரு.
கும்பகோணம்-612001
போன்: (0435)-425726.

**4) N. ராமதுரை.**
ஸற்குணேச்வரபுரம்.
எரவாஞ்சேரி வழி.
போன்: (04366)-73560

**5) R. கல்யாணஸுந்தரம்**
**மிராசுதார்,**
கூந்தலூர்.
போன்:(04366)-73762

**6) G. கண்ணன்,**
D/127-A, ராஜமன்னார்சாலை
கே.கே.நகர்,
சென்னை -78
போன்: 4836495/4848995.

**7) R. வைத்யநாதன்**
மேனேஜர், ஐ.ஓ.பி.,
111, காசிராமன் தெரு,
கும்பகோணம்-612001
போன்: (0435)-426512

**8)திருமதி.சாந்தி மதிவாணன்**
ஸற்குணேச்வரபுரம்,
கருவிலி.
போன்: (04366)-73505.

**9) A.செந்தில் குமார்,**
4.கும்பேஸ்வரர் மதகடித் தெரு.
கும்பகோணம்-612001
போன்: (0435)-428196

**குடந்தையிலிருந்து வரும் அன்பர்கள் வேன்/பஸ்ஸில் இட வசதிக்கு முன்னதாகவே சற்குணேஸ்வர கைங்கர்ய சபா அலுவலகத்தில் பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம்.**

சாதாரணமாக மழைக்கு முன்தான் மின்னலடிக்கும். ஆனால் இந்த மின்னலை மழை விட்ட பின்தான் பார்க்க முடிந்தது. மும்பை வானம் அடங்காப் பிடாரியாய் அழுது கொண்டிருக்க, திடீரென்று மின்னலடித்தாற்போல் ஒரு சிற்று கதிரவன் கண்ணில் பட்டதும், 'மின்னலே' நாயகி ரியாசென்னை அவரது அந்தேரி இல்லத்தில் சந்திக்க, புயலெனப் பாய்ந்தோம்.

மின்சாரம் பாய்ச்சக்கூடிய நெருக்கத்தில், ஒரே மெத்தையில், இந்த மின்னலழகிக் கருகில் அமர்ந்து பேட்டி எடுக்கும் நமது பாக்கியம் இவரது ஆந்திர விசிறிகளுக்கு மட்டும் எட்டியிருந்தால்... பொறாமையால் வெம்பிக் காய்ந்து தீய்ந்தே போயிருப்பார்கள்! தெலுங்கு ராஜ்ஜியத்தின் புதிய ஹ்ரித்திக்கினியாமே இந்த ரீமா?

'சித்ரம்' வெளிவந்தபின், சினிமா நாயக நாயகியரை குலதெய்வமாக வழிபடும் அந்தக் கூட்டத்துக்கு, புதியதொரு 'அம்மன்' கிடைத்து விட்டதில் ஏகப் பரவசமாம்! அதுவும் கண்களிலேயே நட்சத்திர ஜொலிப்புடன், மடைஇறந்த வெள்ளமாய் அருள் வாக்கு (அருவி கொட்டுவது போலல்லவா பேசுகிறார்?) அளிக்கும் குமரி அம்மன் என்றால் கசக்கிறதா? "சித்ரம் வெற்றிச் சித்திரமாகும் என்பதை யூகித்திருந்தோம்; ஆனால் என் முதல் படமே இப்படி சூப்பர் டூப்பர் சக்சஸாகும் என நினைக்கவேயில்லை" என்று ஆரவாரமாக ஆரம்பித்தார் ரீமா.

நாம் சென்றபோது, சென்னைக்கு 'பாக்' செய்து கொண்டிருந்தார். நிவியா க்ரீம், டிப்ஸ் அண்ட் டோஸ், கலாநிகேதன் உள்ளிட்ட 45 விளம்பரப் படங்களில் தன் துறுதுறு முகம் காட்டி, மும்பையின் அதி வெற்றிகரமான கமர்ஷியல் மாடல் என்ற பெருமையைத் தட்டிக் கொண்டிருக்கிறார், கல்கத்தாவில் பிறந்து வளர்ந்த பெங்காலிப் பெண்ணான இந்த ரீமாசென்!



கல்கத்தா... சென்... என்றவுடன் அபர்ணா சென், மூன் மூன் சென் வகையறாவோ என எண்ணி விடாதீர்கள். "ப்ளீஸ் நான் ரியாவின் அக்காவும் (தாஜ்மஹால்), மூன் மூன் சென்னின் மகளுமான ரைமா இல்லை! ரீமா... இதைக் கொட்டை எழுத்துக்களில் போடுங்கள்" என்று அலறினார்.

பள்ளிப் படிப்பை (செயிண்ட் தாமஸ்) முடித்ததும், மும்பைக்கு மாற்றலான பெற்றோரை வந்தடைந்தார். +2வுக்கு ஸோஃபியாவில் சேர்ந்தவரால் படிப்பைத் தொடர முடியவில்லை! காரணம், விளம்பர ஏஜென்சிக்காரரான இவரது நண்பர், 'இந்த முகத்தை வைத்துக் கொண்டு

# மின்னல் - மழை - மோகினி!

நிறைய பாக்கெட் மணி சம்பாதிக்கலாம்' என்று தூண்டில் போட்டு, இவரை மாடலிங்கிற்கு அறிமுகப்படுத்தியதுதான்.

"கௌதமுக்கு (டைரக்டர்) 'மின்னலே' முதல் படம்; ஹீரோவான மாதவனின் முதல் படமும் சூப்பர் ஹிட். என்னுடைய முதல் படம் சித்ரமும் 'ஆல் டைம் ஹிட்'; எங்களுவரின் அதிர்ஷ்டமும் இணைந்து, கௌதமுக்கு வெற்றியைக் குவிக்க வேண்டும் என்பதே என் பிரார்த்தனை" என்றவர் மூன்றாவதாக ஒரு இந்திப் படத்துக்குப் (வீனஸ் மூவீஸ்) புக் ஆகியிருக்கிறாராம்.

"தெலுங்கு, தமிழ் போல்தான் எனக்கு இந்தியும்; எல்லா டயலாக்குகளையும் குருட்டாம் போக்கில் நெட்டுரு அடித்து, முகத்தில் சரியான எக்ஸ்பிரஷன் கொடுத்து, வசனத்தைக் கொட்டி விடுவேன். மாதவனுடன் ஒரு உக்ரமான சீனை, நீண்ட வசனம் பேசி முடித்தேனா... டைரக்டர் 'கட்' சொல்லக் காத்திருந்தது போல், மேடி (மாதவனின் நிக்நேம்) விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்து விட்டார். "தமிழை இந்தப் பாடுபடுத்தி விட்டாயே! இவ்வளவு அகோரத் தமிழ்க் கொலை செய்தவர்களை நான் பார்த்ததேயில்லை என்று விடாமல் நாள் முழுதும் சிரித்தார்



பாருங்கள்... மறக்கவே முடியாது'' என்று நிழல்களின் நிஜங்களைப் படம்பிடித்தார்.

வழக்கம் போல் இதுவும் முக்கோணக் காதலாம்; மேடி-ரீமா-ஆடி (அப்பாஸுக்கு இப்படி ஒரு செல்லப் பெயர் இருக்கக் கூடாதா என்ன?) மூவரைச் சுற்றிய கதை ஓட்டம். சுதந்திர எண்ணங்களுடன், கட்டுப் பெட்டித்தனமான குடும்பத்தில் பிறந்த பெண்ணின் ரோலாம் ரீமாவுக்கு. செட்டில் இளமை கொஞ்சுவது மனசுக்கு மிக ரம்மிய மாக இருக்கிறதென்றார். அந்தக் காலம் போல் தொப்பை, தொந்தி, புகையிலை, வேட்டி, வகையறாக் கூட்டமாக இருந்தால், நான் நடித்தே இருக்க மாட்டேனென்கிறார். இயக்குனர், தயாரிப்பாளரிலிருந்து, லைட் பாய்ஸ் வரை எல்லோரும் ஷார்ட்ஸ், டீ ஷர்ட்தானாம்!

நிச்சயம் நீச்சலுடையில் தோன்ற மாட் டாராம்; கவர்ச்சிக்கும் ஆபாசத்துக்குமிடை யேயான மெல்லிய இழையை துல்லியமாகப் பிடித்து வைத்திருக்கிறாராம். ''தலையி லிருந்து கால் வரை போர்த்திய பெண்ணைக் கூட, காமிராக் கோணங்களால் கேவலப் படுத்த முடியும்; அதுவே ஷார்ட்ஸ் போட் டுக் கொண்டு (சத்தியமாக என் வார்ட் ரோப்பில் ஒரு ஷார்ட்ஸ் கூட இல்லை) போனி டெய்ல்ஸுடன் கொஞ்சமும் ஆபாசமின்றி, சித்ரமில் நான் வந்தது போன்று செய்ய முடியும்; கதையமைப் பையும், இயக்குநரின் எண்ண அலை களையும் பொறுத்தது அது'' என்றார் ஆணித்தரமாக.

ஃபேவரிட் ஸ்டார்லெல்லாம் கிடையா தாம். ஆனால் டாம் க்ரூஸே வந்து அழைத் தாலும், தன் பாத்திரப் படைப்பு முழுமை யானதாக இருந்தால்தான் நடிப்பாராம். கொஞ்சம் படிக்கப் பிடிக்கும்; நல்ல இசை எதுவாயிருந்தாலும் ரசிப்பாராம்; டான்ஸே கற்றுக் கொள்ளவில்லை என்றாலும் இயற் கையாகவே உடலில் ஒரு 'ரிதம்' இருக்கிற தாம். கணவனைப் பட்டினி போடாத அளவுக்கு சமைக்கத் தெரியுமாம்! (சைவம்+அ...)! அந்த மனிதர் மாட்டி விட்டாரா? என நாம் ஆர்வக்கவும், "பைத்தி யமா என்ன? அதற்குள்ளேயே பிடிப்பதற்கு" என்கிறார் தனக்கு '19' வயதே ஆவதை நினைவுபடுத்தி.

இலக்கு இலட்சி யம் என்றெல்லாம் கஷ்டப்படுத்திக் கொள்ளவில்லை; ஆனால் எதைச் செய் தாலும் அதைப் பனிச் சென்று செய்து, பிரகாசிக்க வேண்டும் என்பதில் பிடிவாதமா யிருக்கிறார். தன் பிடி வாத குணத்திற்குச்

## பட்ரீட்மெண்ட்

தனியார் இன்ஜினியரிங் காலேஜில் நாலு வருடங்கள் படித்து ஒரு கம்ப்யூட்டர் கம்பெனியில் ஒரு வருடம் வேலை பார்த்து விட்டு அந்த இளைஞர் பாரதிராஜா ஆபீசில் சினிமா சான்ஸுக்காகத் தேவுடு காத்தார். மூன்று வாரம் பொறுமையாய் கால் கடுக்க நின்றதில் பலன், பாரதிராஜாவின் ஆபீஸ் வாட்ச்மேனின் நட்பு கிடைத்ததுதான்.

அப்புறம் மணிரத்தினத்திடம் மூற்றுகை. பலன் பூஜ்ஜியம். மூன்றாவதாக பிரியதர்ஷன். 'அடுத்த படம் பண்ண இன்னும் ஆறு மாதமாகும்; அப்போது வந்து பார்' என்று சொல்லிவிட்டார். ''இன்ஜினியரிங் படித்துவிட்டு, பார்த்த வேலையை விட்டு விட்டு, இப்படி ஒரு நிலை நமக்குத் தேவைதானா என்று சில சமயங்களில் வெறுப்பு ஏற்படுமாம் அந்த இளைஞருக்கு.

நாலாவதாகப் போய் நின்றது ராஜீவ்மேனன் ஆபீஸ். அப்போது ராஜீவ் மேனன் மின்சாரக் கனவு பட வேலையை ஆரம்பித்திருந்த சமயம். அந்தப் படத்துக்கு, ஜுனியர் மோஸ்ட்



## புதுசு!''

அசிஸ்டென்ட் டைரக்டராய் பணியாற்றினார்.

''அந்த அனுபவம் என் வாழ்க்கையில் மிக முக்கியமான கட்டம்'' என்கிறார் அந்த இளைஞர். அவர்தான் 'மின்னலே' படத்தை இயக்கும் கௌதம்.

''என் அப்பாவும், அம்மாவும் எனக்குத் தொடர்ந்து அளித்த ஊக்கம்தான், பல்வேறு சிரமங்களையும் நான் சந்தித்தபோது, மனம் தளராமல் இருக்க உதவியது. சுமார் இரண்டு வருடம் ராஜீவ்மேனனுடன் பணியாற்றும் அனுபவத்துடன், 'கலைஞன்' பட இயக்குனர் ஜி.வி. விஜய் உடன் இருபதுக்கும் அதிகமான விளம்பரப் படங்களுக்குப் பணியாற்றிய அனுபவமும் சேர்ந்து கொள்ள, அடுத்தகட்டமாக, டைரக்ஷன் வாய்ப்புக்கு முயற்சி செய்தார் கௌதம்.

இடையில் அப்பாஸ், மாதவன் ஆகியோரது நட்பு ஒரு வரப்பிரசாதம். ஒரு கதையை ரெடி பண்ணி, சீ டீ.வி. நிறுவனத்தின் டாக்டர் முரளி மனோகரிடம் சொன்னவுடன் ஓ.கே. ஆகி விட்டது.

''சிம்பிளான காதல் கதைதான். ஆனால் ட்ரீட்மெண்ட் புதுசு. சில காட்சிகள், படம் பார்க்கிறவர்கள் துளியும் எதிர்பார்க்கவே முடியாதவை. சுவாரசியமானவை. சென்னையில் கல்லூரி மாணவர்கள் எங்கெங்கெல்லாம் கூடி நின்று அரட்டையடிப்பார்களோ அங்கெல்லாம் ஷூட் பண்ணப் போகிறேன். பாடல்களுக்குப் புதுப்புது ஐடியாக்கள் கைவசம் வைத்திருக்கிறேன். இது என் முதல் படம். ஆனால், நான் என் முதல் படத்துக்காக ரெடி பண்ணின கதை இது இல்லை'' என்கிறார் கௌதம்!

— மௌலி



• கௌதம், விவேக், மாதவன்

சான்றாக ஒரு கோடி காட்டினார்...

''சித்ரம் செட்டில் நான்தான் பேபி! நான் எது கேட்டாலும் கிடைத்து விடும்; நடுவே மூன்று நாள் ஷூட்டிங் பிரேக் இருந்தது. எனக்கு எட்டு வயதில் ஒரு தங்கை இருப்பதால் என் அம்மா உடனடியாக மும்பை திரும்பி விட்டார். நான் ஹோம் சிக் ஆகி விட்டேன். 'பிரேக்' போது என்னை மும்பை சென்று திரும்பி வர டைரக்டர் அனுமதித்தார். ரொம்ப குஷியாகி விட்டேன்; ஆனால் ஷூட்டிங் இழுத்தடித்தது. மூன்று நாள் 'பிரேக்' அரைநாளாகக் குறுகி விட்டது. நான் நொறுங்கி விட்டேன். அன்று செட்டில் டைரக்டர் 'ஏன் உம்மென்றிருக்கிறாய்?' என்றார். நான் 'ஆ' என அலறி அழுதேன். மறுபடியும் மேக்கப் போடச் செய்தார்; திரும்பவும் 'மூட் ஆஃப்' ஆனதால், 'என்ன ஆயிற்று' என்றார். மறுபடி 'ஓ'வென்று ஓலமிட்டேன். மீண்டும் 'டச்சப்' செய்து விட்டு ''இப்பச் சொல்லு'' என்றார். நான் பலமாக திரும்பவும் காச்மூச்சென்று கதறினேன். அடுத்த நிமிஷமே மும்பைக்கு டிக்கெட் வாங்கி விட்டார்'' என்றார் கலகலத்தவாறே.

அடுத்த நிமிடமே கழண்டு விட்டோம். சென்னை ஃப்ளைட்டுக்கு நேரமாகி விட்டதென்று இதே யுக்தியை நம்மிடம் கையாண்டால்? அப்புறம் ENT ஸ்பெஷலிஸ்ட் பில்லை கல்கி ஆசிரியருக் கல்லவா அனுப்பி வைக்கும்படி இருக்கும்?

— ஜெயஸ்ரீ ராஜ்



# மலட்டுத்தன்மை, குழந்தையின்மை, ஆண்மைக்குறைவு, நரம்புத் தளர்ச்சி போன்றவைகளுக்கு தெய்வீக மூலிகைகள்



**ஆண்மைக்குறைவு**:- பொதுவாக ஆண்களுக்கு ஏற்படுகின்ற பாலுணர்வு குறைபாடுகளில் ஆண்மைக்குறைவும் முக்கியமாக திகழ்கிறது. ஆண்மைக்குறைவு என்பது ஒருவருக்கு உடலுறவு கொள்ளும் அளவு விரைப்பு தன்மை இல்லாமல் இருத்தலே ஆகும். மலட்டுத்தன்மை என்பது உடலுறவு கொள்ளும் அளவுக்கு ஒருவருக்கு விரைப்பு இருக்கும். விந்தும் உற்பத்தி ஆகும். ஆனால் கருத்தரிக்கும் அல்லது கரு உற்பத்தி ஆகும் அளவிற்கு அதில் உயிர் அணுக்கள் இருக்காது. இதனையே மலட்டுத்தன்மை என்று கூறுவார்கள். இந்த இரண்டு நிலைமையில் உள்ளவர்களாலும் குழந்தை பாக்கியத்தை பெற இயலாது.

**ஆண்மைக்குறைவு ஏற்படக்காரணம்**:- நம் உடலில் உற்பத்தியாகும் விந்துவை விந்து பைகள் சிறிது காலத்திற்குத் தான் வைத்திருக்க முடியும். விந்து உருவாக்கும் செயல் தொடர்ந்து நடைபெறுவதால் உடல் இவற்றை எந்த விதத்திலேனும் பயன்படுத்த வேண்டியதாகிறது. திருமணம் ஆகாததால் உடலுறவு கொள்ள இயலாத நிலையிலுள்ள இளம் வயதில் அதிகப்படியாக உள்ள விந்து, இயற்கையாக தாமாகவே வெளியேறும். ஆனால் சிலர் தாமாகவே சுய இன்பம் என்ற பெயரில் அடிக்கடி விந்துவை வெளியேற்றி விடுவார்கள். இது உற்பத்தி ஆகும் அளவைவிட, வெளியேற்றும் அளவு அதிகமானால் இன்பம் என்பதற்கு பதில் துன்பமாக மாறிவிடும். காரணம் விந்து குறைந்தவன் ஆண்மையற்றவனும் ஆகலாம், மலட்டுத்தன்மை கொண்டவனாகவும், நரம்புகள் தளர்ச்சியுள்ளவனாகவும் மாறலாம்.

**காரணம்**:- விந்தணுக்கள், உடல் வளர்ச்சி, திசுக்கள் வளர்ச்சி, எலும்புக்குள் உள்ள ஊன் சக்தி ஆகியவை நிரம்ப இருக்க காரணமாக இருக்கின்றது. மேலும் உடலுக்கு வலிமை, தைரியம், ஐம்புலன்களின் (கண், காது, மூக்கு, வாய், உடல் போன்றன) செயல்களை சரிசெய்யும் திறமை, அறிவாற்றல், நினைவாற்றல், உடல் பொலிவுடன் இருக்கவும் உதவுகின்றன. தவிர விந்து குறைந்தால் உடலின் எடையும், அழகும் குறையும், உடல் பலஹீனமடையும். இதனால்தான் "விந்து விட்டான் நொந்து கெட்டான்" என்றும் இரண்டடக்கேல் ஒன்று விடேல் என்றும் கூறினார்கள். இரண்டடக்கேல் என்பது மலம், சிறுநீர் அடக்க கூடாது என்றும், உணர்ச்சியின் போது வெளிப்படுத்தி விடவேண்டும் என்றும், ஒன்று விடேல் என்பது விந்துவை வெளிப்படுத்தாதே என்றும் பொருள் ஆகும்.காரணம் நம் உடலின் உயிராற்றல் என்பது விந்து சக்தியே ஆகும். உயிராற்றல் குறைந்தால் உடலின் மொத்தமாகவும் பாதிப்புக்குள்ளாகும். ஆகவே உடலுறவை அளவுடன் வைத்துக் கொள்வது நல்லது ஆகும்.

**ஆண்மைக்குறைவுக்கான மூலிகைகள்**:- வேப்பிலை, வில்வம், அத்தி, அருகம்புல், நாவல், நெல்லி, கடுக்காய், மாவிலை, அரசனிலை, முருங்கைபூ, ஆவாரம்பூ, ஒரிதழ் தாமரை, அமுக்கரா, ஆலயிலை – போன்ற மூலிகைகள் பறித்து வந்து வெயிலில் உலர்த்தி பொடி செய்து பின் சமஅளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டலில் வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணிநேரம் முன்பாக தினமும் காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் உட்கொள்ளவும். இம்மூலிகை மருந்துகளால் விந்து உற்பத்தி அதிகமாகும், விந்து கெட்டியாகும், உடல் நன்கு வளர்ச்சி அடையும்.

**ஆண்மைக்குறைவுக்கான உணவுமுறைகள்**:- இந்நோயாளிகள் தினம் காலை ஒருவேளை இயற்கை உணவுகளாக பச்சையாக உண்ணும் பழங்கள், காய்கறிகள், Vegetable Salad & Fruit Salads போன்றனவும், மற்ற இரண்டு நேரம் சமைத்த உணவுகளாக Vegetable Soup, கீரைகள் Soup, பட்டாணி வகைகள், சுண்டல்கள் போன்றன வாகவும், ராகி, கம்பு, கோதுமை, பார்லி, மக்காசோளம் போன்ற தானியங்களில் இருந்து கஞ்சி, ரொட்டி போன்றன தயார் செய்து உட்கொள்ளவும். இதனால் உடலுக்கு தேவையான சக்திகள் கிடைத்து, போதுமான ஆரோக்கியம் அதிகரிக்கும்.

**உடற்பயிற்சிகள்**:- ஆண்மைக்குறையுள்ளவர்கள் தினம் காலை, மாலை 30 நிமிட நேரம் எளிய உடற்பயிற்சிகள் வயதிற்கு தக்கவாறு செய் தாக வேண்டும். குறிப்பாக இயன்றவரை வேகமாக நடத்தல், மெல்லோட்டம், கயிறாட்டம் (Skipping), ஜாக்கிங், நீந்துதல், கைகால் விரல்களை நீட்டி மடக்குதல், உட்கார்ந்து எழுதல், குனிந்து நிமிர்தல், நின்ற இடத்தில் ஓடுதல், நின்ற இடத்தில் குதித்தல், மூச்சுப்பயிற்சிகள், வஜ்ராசனம், பத்மாசனம் போன்ற எளிய உடற்பயிற்சிகள் செய்தல் நல்லது. இப்பயிற்சிகளால் உடலில் இரத்த ஓட்டம் அதிகரிக்கும். இரத்த குழாய்கள் விரிவடையும். நரம்புகள், எலும்புகள் வலுப்பெறும் இதனால் ஆண்மைக்குறைவு நீங்க பெரிதும் துணைபுரியும்.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : **Dr.M.குருபரன், Dr.M.சபாபதி, & Dr.M.சிவசக்தி, S/o.Dr.C.K.மாணிக்கவாசகம்**

P.B.No:30,No:3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் செல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638

**குறிப்பு:** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் விபரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்

**7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**9-ந் தேதி - பெங்களூர் : காலை 11 to 1 ஹோட்டல் பிரசாந்த், (கல்பனா தியேட்டர் அருகில்) செம்பே கவுடா ரோட் ✆ : 2266374**

**18 & 19-ந் தேதி - புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆ : 5717126, 5723651**







2000 ஜூலை 23
விக்ரம ஆடி 8
மலர் : 58
இதழ் : 52

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## பீஹாரில் ஜாதி வெறி!

இந்தியாவின் மிகப் பின்தங்கிய மாவட்டம் பீஹார் - பொருளாதாரத்திலும் வேலை வாய்ப்பிலும் மட்டுமல்ல... அரசியல் கலாசாரத்திலும் ஜனநாயக வளர்ச்சியிலும் மட்டுமல்ல... மனிதாபிமானத்திலும் மிக மிகப் பின்தங்கிய மாவட்டம் அது.

அப்பாவி தலித் மக்களை உயர்ஜாதி கூலிப்படையினர் அவ்வப்போது கொன்று குவிக்கும் கோரச் சம்பவங்கள் அங்கே நடந்து வருகின்றன. ஆனால் அமைச்சராக இருந்த லலித் யாதவ் நிகழ்த்திய கொடுமை வெறும் கண்மூடிக் காட்டுமிராண்டித்தனமல்ல - அதிகார அகந்தையுடன் மிருகத்தனமும் இணைந்த வெறியாட்டம் அது.

அப்பாவிகளான இரண்டு தலித்களைத் தமது வீட்டிலேயே ஒரு மாத காலம் சிறை வைத்துச் சித்திரவதை செய்து, உடல் முழுதும் காயங்கள் ஏற்படுத்தியபின், தமக்கும் அந்த அட்டூழியத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்று ஒரு பத்திரிகையாளர் கூட்டத்தையும் கூட்டி அறிவிக்கும் அளவுக்குத் திமிர் இருந்திருக்கிறது பீஹார் அமைச்சருக்கு!

பல கிரிமினல் குற்றங்கள் சுமத்தப்பட்ட தொழில்முறை குற்றவாளி லலித் யாதவ். இந்த வடிகட்டின குரூரத்தைத் துளியும் அஞ்சாமல் நிகழ்த்தும் தைரியம் அவருக்கு இருந்ததில் ஆச்சர்யமில்லை.

பீஹாரின் அமைச்சர் என்ற பதவி தரும் பாதுகாப்பும் ஜாதி அடிப்படையிலான உயர்வு




மனப்பான்மையும் மட்டும் இந்தத் திமிரைத் தந்து விடாது. இதுபோன்ற தவறுகளுக்குத் துணை போகும் மனச்சாட்சியற்ற ஆர்.ஜே.டி. அரசின் ஓர் அங்கமாக இருப்பதும் லலித் யாதவுக்கு வேறு எதைக் காட்டிலும் அதிக தைரியத்தைத் தந்துள்ளது.

கோடி கோடியாக ஊழல் செய்த லாலு பிரசாத் யாதவ் பகிரங்கமாக ஆட்டி வைக்க, ஒரு பொம்மலாட்ட அரசாங்கம் பீஹாரில் நடந்து வருகிறது. பத்து ஆண்டுகளாக அந்த மாநிலத்தில் எந்த முன்னேற்றமும் ஏற்படுத்த முடியாத ஒரு வெத்து வேட்டு கட்சியே மக்களால் ஆதரிக்கப் பட்டு ஆட்சியில் அமர்த்தப்பட்டிருக்கிறது.

சிந்திக்கத் தெரியாத எளியவர்கள் கையில் சிக்கிய அபாயகரமான ஆயுதமாக பீஹாரில் ஜனநாயகம் மாறிப் போயிருக்கிறது.

லலித் யாதவ் பதவியிலிருந்து நீக்கப்பட்டிருப்பது மட்டுமே ஆறுதலான விஷயம். ஆனால், அவர் பேரில் குற்றம்சாட்டப்பட்டு, வழக்கு தொடரப்பட்டு தண்டனை வழங்கப்படும்வரை இந்த நாட்டில் நீதி - நேர்மைக்கு அர்த்தம் இருக்காது.

குற்றத்தை வெளிக்கொண்டு வந்த மீடியாக்காரர்கள், குற்றவாளி விசாரிக்கப்பட்டு நீதி வழங்கப்படும் வரை போராடியாக வேண்டும்.

## கர்நாடகாவில் மதவெறி!

கர்நாடக மாநிலத்தில் கிறிஸ்தவ வழிபாட்டுத் தலங்கள் தாக்கப்பட்ட சம்பவங்களை மிகவும் பொறுப்பான முறையில் அணுகி சீர் செய்ய முயன்றிருக்கிறார் முதல்வர் எஸ். எம்.கிருஷ்ணா.

குண்டு வெடித்த ஹூப்ளி செயின்ட் லூதரன் சர்ச்சுக்கு உள்துறை அமைச்சரை அனுப்பி




வைத்தும் பெங்களூரில் பாதிப்புக்குள்ளான செயின்ட் மேரீஸ் பாஸிலிகாவுக்குத் தாமே சென்று பிரார்த்தனையில் கலந்து கொண்டும் புண்பட்ட உணர்வுகளை ஆற்ற முயன்றிருக்கிறார்.

இக்கட்டான தருணத்தில் ஒரு முதல்வர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கான முன்னுதாரணமாக அமைந்திருக்கிறது அவருடைய அணுகுமுறை. பிரச்னையை அரசியலாக்காமல் யாரையும் குற்றம்சாட்டாமல் விசாரணைக்கும் பாதுகாப்புக்கும் மட்டும் உத்தரவாதம் அளித்திருக்கிறார்.

இதுபோன்ற வேறு நிகழ்ச்சிகளின் போது பிரதமரும் அத்வானியும் செயல்பட்ட விதத்தை விட முதிர்ச்சியுடன் அவர் நடந்து கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

எனினும், பி.ஜே.பி. ஆளும் மாநிலம், பி.ஜே.பியுடைய ஆதரவு கட்சி ஆளும் மாநிலம் அல்லது பி.ஜே.பியை எதிர்க்கும் கட்சி ஆளும் மாநிலம் என்ற வேறுபாடு எதுவுமின்றி காங்கிரஸ் ஆட்சி நடக்கும் மாநிலத்திலும் கிறிஸ்தவ ஆலயங்கள் தாக்கப்படுகின்றன என்பது கவனத்துக்குரியது.

ஹிந்து தீவிரவாத அமைப்புகள் தாக்கினவா அல்லது அவ்வமைப்புகளுக்கு அவப்பெயர் உண்டாக்க முஸ்லிம் தீவிரவாத அமைப்புகள் சர்ச்சுகளைத் தாக்கினவா என்பது விசாரணைக்குரியது.

நீண்ட கால நலனை உத்தேசித்து, இன்றே இப்போதே நிகழ்த்தப்பட வேண்டிய மிகப் பெரும் சீர்திருத்தம் அரசியலிலிருந்து மதவாத நோக்கை அடியோடு களைவதுதான்.

குறுக்கு வழியில் வோட்டுகள் குவிக்கும் குயுக்தி ஆயுதமாக மதவாதம் நீடிக்குமானால், அதே மதவாதம் நாடு தழுவிய நாச வேலைகளுக்குத்தான் மீண்டும் மீண்டும் வழிவகுக்கும். நல்லாட்சிக்கு உதவாது. ●

கராத்தே, வில்வித்தை, விமானி என்று கிட்டதிட்ட அத்தனை ஆணாதிக்கத் துறைகளையும் உடைத்துவிட்ட தமிழ்ப் பெண்களின் லேட்டஸ்ட் ஆக்கிரமிப்பு பாக்ஸிங்! லட்சக் கணக்கான டாலர் பணப் பரிசுகள் கொட்டும் அமெரிக்காவின் புரபஷனல் பாக்ஸிங் போட்டிகளில் லைலா அலி கலந்துகொண்டு, நான் முகமது அலியின் குட்டிப்புலி என நிரூபித்தாலும் நிரூபித்தார், உலகம் முழுக்க, குத்துச் சண்டையில் ஆர்வத்தோடு குதித்து, ஆ...ஊ என்று ஆக்ரோஷமாகக் குரல் கொடுக்கிறார்கள் பெண்கள்.

# பாக்ஸிங்... பாக்ஸிங்!

இந்தியாவில் சில வட மாநிலங்களில் மட்டுமே அமெச்சூர் பெண் பாக்ஸர்கள் இருந்தனர். தமிழ்நாடு குத்துச் சண்டை கழகத்தின் தீவிர முயற்சியால் இப்போது தமிழகத்தில் பன்னிரண்டு பெண் பாக்ஸர்கள் ரெடி! சென்ற மாதம், மாநில அளவிலான முதல் போட்டியையும் நடத்தி, அதை வரலாற்றில் வரவு வைத்து விட்டார்கள். கையோடு தேசிய அளவிலான போட்டியில் மோதுவதற்குத் தேர்வு செய்யப்பட்ட பன்னிரண்டு வீராங்கனைகளுக்கும் கடந்த மூன்று மாதங்களாகக் கடுமையான பயிற்சி கொடுத்து வருகிறார்கள். சென்னை நேரு விளையாட்டு அரங்கில் கலர், கலராக கையுறைகளை மாட்டியபடி பயிற்சியில் ஈடுபட்டிருந்த பெண்களிடம் கோச் சம்பத் உதவியுடன் கொஞ்சம் எட்டி நின்றே பேச்சுக் கொடுத்தோம்.

டிப்ளோமா இன் நர்ஸிங் படித்துவிட்டு, இந்து மிஷன் மருத்துவமனையில் நர்ஸாக வேலைக்குச் சேர்ந்த தேவிகா கபடியில் ஸ்டேட் சாம்ப்பியன். அண்ணன் ஒரு பாக்ஸர். அண்ணன் கலந்துகொண்ட போட்டியை பார்க்க, எதிர்பாராமல் சென்ற தேவிகாவுக்குக் குத்துச் சண்டை மீது ஆர்வம் வர, அண்ணனிடம் சொல்லியிருக்கிறார். ஆனால் அப்போது பெண் பாக்ஸர் இல்லாததால் இவரது கனவு நிறைவேறாமல் போய்விட்டது. ஒரு நாள் வேலை முடிந்து மருத்துவமனையிலிருந்து வீட்டிற்கு வந்தவரிடம் "பெண் பாக்ஸர்கள் செலக்ஷன் நடக்கிறது. வருகிறாயா?" என்று அண்ணன் கேட்க... மறுநாள் தேர்வில் முதல் ஆளாக வந்திருக்கிறார். இப்போது தேசிய அளவிலான போட்டியில் கலந்து கொள்ள நர்ஸ் வேலையை ராஜினாமா செய்து விட்டாராம்!

• பர்வின்



• சம்பத்



முதல் போட்டியில் 54-57 கிலோ எடைப் பிரிவின் கீழ் தங்கப்பதக்கம் வென்றுள்ள இவர் பிராட்வே பாரதியார் கலைக் கல்லூரியில் பிகாம் படிக்கும் மாணவி. அதலெட்டிக் வீராங்கனையான இவர், 'நடைபெறப் போகும் தேசியப் பாக்ஸிங் போட்டியில் மணிப்பூர் பெண்களை எப்படி சமாளிப்பது என்பதற்குச் சிறப்புப் பயற்சி எடுத்து வருகிறேன்' என்கிறார்.

அப்பா ஒரு போலீஸ்காரர் என்பதைத் தவிர மீனாட்சிக்கும் குத்துச் சண்டைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. மாநில அளவிலான பெண்கள் குத்துச்சண்டையின்

பாரதியார் கல்லூரியில் படிக்கும் ரமணி 51-54 கிலோ பிரிவில் தங்கப்பதக்கம் வென்றவர். ஒருமுறை கல்லூரி விட்டு வருகையில் பின் தொடர்ந்து வந்து கலாட்டா செய்த இளைஞர் ஒருவருக்கு கராத்தே பஞ்ச் கொடுத்து விரட்டியதால் 'தோழிகள் மத்தியில் இவருக்கு 'புரட்சிப்புயல்' என்ற





• ரமணி



• அகிலாண்டேஸ்வரி



• தேவிகா

பட்டப் பெயரே உண்டாம். இது போதாது என்று பையன்களை எப்படி அடித்தால் ஓடு வார்கள் என இவரது அப்பா வர்மக்கலை டிப்ஸ் சொல்லித் தருகிறாராம்! 'பாக்ஸிங் போட்டியில் ஒலிம்பிக் வரை போவேன்' என்று சொல்லும் ரமணி, 'இதை முழுமையாகக் கத்துக்கொண்டு நிறையப் பெண்களுக்குச் சொல்லிக் கொடுப்பேன்' என்கிறார்.

**கோ**டை விடுமுறையை, தமது இரண்டு குழந்தைகளோடு, சென்னையில் தனது மாமா வீட்டில் கழித்து விட்டுப் போகலாம் என வந்திருக்கிறார் திருவண்ணாமலையைச் சேர்ந்த அகிலாண்டேஸ்வரி. தமது மாமாவின் மகள் மீனாட்சி பாக்ஸிங் பயிற்சி பெறுவதைப் பார்த்திருக்கிறார். ஸ்டேட் அதெலெட் வீராங்கனையாக இருந்த இவர், திருமணத்திற்கு பிறகு குடும்பத் தலைவியாக வாழ்க்கைத் தடம் மாறிப் போனாலும், மீண்டும் தமது விளையாட்டு ஆர்வத்தை பாக்ஸிங் மூலம் புதுப்பித்துக் கொண்டால் என்ன என்று திடீர் முடிவெடுத்து விட்டார். தமது ஆறுமாதக் குழந்தையை மாமியாரிடம் விட்டு விட்டு, போட்டித் தேர்வு எழுதப் போவதாக கணவரிடம் சொல்லிவிட்டு செலக்ஷனில் தேறி பாக்ஸிங் பயிற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார். தேசிய போட்டியில் ஜெயித்து விட்டுப்போய் கணவருக்கு இன்ப அதிர்ச்சி கொடுக்கப் போகிறேன் என்கிறார் அதிரடியாக!

**ப**ர்வின் கதையிலோ இன்னும் சுவாரஸ்யம். அண்ணன்கள் இருவரும் பாக்ஸர்கள். சிறு வயதிலிருந்தே கட்டிப் பெண்ணாக இருக்கும் தங்கையையும் பாக்ஸர் ஆக்கி விட வேண்டும் என்று அண்ணன்கள் விரும்ப, பர்வின் ஒகே சொல்லி இருக்கிறார். அப்பா ஒப்புக் கொண்டாலும் அம்மா தரப்பில் பயங்கர எதிர்ப்பு. ஒரு வழியாக, கட்டுப்பாடுகளை உடைத்துக்கொண்டு வெளி வந்திருக்கும் பர்வின், மாலை பயிற்சி முடிந்ததும், பர்தா வில் வீட்டுக்குக் கிளம்பி விட்டார்!

**— லியோ**

படங்கள்: **வெங்கடேஷ்**




# நல்லதொரு எச்சரிக்கை!

ஹிருபதாம் நூற்றாண்டு ஜோக்கு களில் சிறந்தவற்றைத் தேடிப் பிடித்து வெளியிட்ட 'ஹல்ஹி'யின் பாணியே தனி தான். கீப் ஹிட் அப்!
காசிபாளையம், ஆ. சக்திவேலன்.

கல்கியின் தமாஷ் திருவிழா எங்களை திக்குமுக்காட வைத்தது. எதைப் பற்றி குறிப் பிட்டுச் சொல்வது? சிறுகதை முதற்கொண்டு நகைச்சுவையாளர்களின் பங்களிப்பு வரை அனைத்து அம்சங்களும் பாராட்டும்படி அமைந்திருந்தது. வெல்டன்!
மொரட்டுப்பாளையம்,
க.நா. இராஜேஸ்வரன்.

காமெடிக்குக் கஷ்ட காலம் என கோவை சரளா சொல்வதை ஏற்க முடியாது. இரட்டை அர்த்த வசனமற்ற நல்ல காமெடிக்கு இன்னும் மதிப்புள்ளது. பழைய படங் களில் வரும் நல்ல நகைச்சுவைக் காட்சிகளைப் பார்ப்பதற்கென்று ஒரு கூட்டம் இன்றும் உள்ளது. தரம்தான் முக்கியம். சார்லி சாப் ளின், லாரல் ஹார்டி படங்களை இன்றும் ரசிக்க முடிகிறதே?
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

பிரச்னையை தீர்க்க முயற்சிக்காமல் சமாளிப்பு படலத்திலேயே இருக்கும் வாஜ்பாய் அரசுக்கு இவ்வார தலையங்கம் நல்லதொரு எச்சரிக்கை.
புனே, ஜெ. ரஜினி ராம்கி.

மசாலா இல்லாத சமையலா, மாதுரி இல்லாமல் சிரிப்பு ஸ்பெஷலா என்று சொல் கிற அளவுக்கு எங்கள் நகைச்சுவை உண(ர்) வுக்கு நல்ல தீனியாய் இருந்தது. 'சபாஷ், சரி யான பாட்டி!'
திருவண்ணாமலை, திருவை.அருணானந்தம்

இப்படியெல்லாம் கற்பனை பண்ணி, துரைமுருகனைச் சீண்டிப் பார்த்தால், அவர் 'ஓ'வென்று அழ ஆரம்பித்து விடுவார். அவரின் கண்ணீருக்குக் கல்கி காரணமாக இருக்க வேண்டுமாக்கும்?
அரவக்குறிச்சிப்பட்டி, எம்.அசோக்ராஜா.

அப்பு விமர்சனம் 'நச்'சென்று இருந்தது வெகு சில வரிகள் படத்தின் தரத்தை விளக்கியது.
திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்.

தென்கச்சி சுவாமிநாதனின் ரசிகையான பாலா பாட்டியைப் பற்றிப் படித்து நீண்ட நேரம் விழுந்து விழுந்து சிரித்து ரசித்தேன்.
மதுரை – 10, வி. சிவா.

ஒவ்வொரு முறை நாடகம் போடும் போதும் நிஜ வாழ்க்கையில் நிறைய காமெடி களைச் சந்திக்க நேர்ந்து விடுகிறது என்று சில சம்பவங்களைக் கிரேசி மோகன் எடுத் துரைத்தது படு சுவாரஸ்யம்.
சென்னை – 73, கே.வி. ராமன்.

## குறையொன்றுமில்லை

குறையொன்றுமில்லை ஆன்மீகத் தொடரை நேரில் கேட்பது போன்ற உணர் வுடன் வழங்கிய தங்களுக்கும், சொற்பொழிவு நிகழ்த்திய அருளாளர் முக்கூர் லக்ஷ்மி நரசிம் மாச்சார்யார் அவர்களுக்கும், பொருத்தமாக ஓவியங்கள் வரைந்த பத்மவாசனுக்கும் மனமார்ந்த பாராட்டுகள்.
சென்னை, சி.பூங்கோதை

வாரா வாரம் எங்களை ஆன்மீகக் கடலில் மூழ்கடித்து பக்திப் பரவசத்தில் ஆழ்த்திவிட்ட முக்கூர் லக்ஷ்மி நரசிம் மாச்சார்யார் அவர்களின் உரைக் கோவையை உயி ருள்ளவரை மறக்க முடி யாது.
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்



ஏறத்தாழ ஒன்றரை ஆண்டுகளாக ஆயிரக் கணக்கான ஆன்மீக உள் ளங்களை நெகிழச் செய்தது குறையொன்று மில்லை தொடர். சான்றோர்களின் மேற் கோள்கள் தொடரை மேலும் பரிமளிக்கச் செய்தன. முக்கூராருக்கு அனேக கோடி வணக்கங்கள்.
சென்னை, ரங்கராஜன்

த.மா.கா. தலைவர் மூப்பனார் வீடு. அதிகாலையில் அந்த வேன் போய் நிற்கிறது! சாதாரணமாக வந்த அவர் ஒரு நிமிடம் யோசித்து 'என்ன?' என்கிறார். அந்த வேன் திறக்கப்படுகிறது. உள்ளே பார்த்த மூப்பனாருக்கு ஷாக்!

அவர் ஷாக் ஆனதற்குக் காரணம் இல்லாமலில்லை. வீட்டு ஹாலில் போட்டிருக்கிற மாதிரி சோஃபா செட். அதையே சொகுசு மெத்தையாக்கிக் கொள்ளலாம். கொஞ்சம் கண்ணைத் திருப்பினால் சமையலறை. கேஸ், அடுப்பு உட்பட. கண்ணாடி பதிக்கப்பட்ட மெகா பீரோ. முகத்தைப் பார்த்துக் கொண்டே திறந்தால், அட பாத்ரூம்! கண்களைப் பின்பக்கம் திருப்பினால் டி.வி., ஏ.சி!

இத்தனையும் ஒரு வேனுக்குள் இருந்தால் மூப்பனார் ஆச்சரியப்பட மாட்டாரா என்ன?

"ஒரு சொகுசு பங்களா ஸ்டைல்ல இருக்கே" என்பது மாதிரி மூப்பனாரை மூக்கின் மேல் விரல் வைக்க வைத்த இந்த வண்டி கேம்பர் வேன்!

"ஆஸ்திரேலியா, கனடா, ஜெர்மனி போன்ற வெளிநாடுகள்ல இது மாதிரி வண்டிகள் அதிகம். இந்தியாவுல தனிப்பட்ட முறையில வி.வி.ஐ.பிக்கள் வச்சிருக்கலாம். வாடகைக்குன்னு வந்திருக்கிறது இதுதான் முதல் வேன்" என்கிறார்கள் இந்த சொகுசு வேனை அறிமுகப்படுத்தியிருக்கும் அனுஷா லெஷர் (Ansha Leisure) நிறுவனத்தின் மலையப்பனும், உஷாசிஸரும்.

இங்கிருந்து ஊட்டிக்கு டூர் போகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். செல்லும் வழியிலுள்ள முக்கியமான ஸ்டார் ஹோட்டல்களில் பார்க்கிங்கிற்காக இந் நிறுவனம் பேசியிருக்கிறதாம். இரவில் இங்கு வேனை நிறுத்தி காரிலேயே தூங்கிவிட்டு மறுநாள் புறப்படலாமாம்.

"ஆறு பேர் தூங்கறதுக்கான படுக்கை வசதி இருக்கு. டிரைவர் சீட்டுக்கும் உங்களுக்கும் தொடர்பு இருக்காது. உள்ள இருக்கறவங்களோட



பிரைவசி கெடக் கூடாதுங்கறதுக்காக இந்த ஏற்பாடு. ஒரு இடத்துல வண்டிய நிறுத்தணும், டிரைவர்ட்ட சொல்லணும்னா அதுக்கு இன்டர்காம் இருக்கு" என்கிறார் மலையப்பன்.

ஆஸ்திரேலிய மாடலில் இங்கு வடிவமைக்கப்பட்ட இதற்கான மொத்த செலவு இருபது லட்சமாம்.

"டூர் போறவங்களுக்கு வெளியூர்ல ஹோட்டல் சாப்பாடு

# உருளும் உல்லாசம்!



ஒத்துக்காம போகலாம்; சிலருக்குப் பிடிக்காம இருக்கும். இதுக்காகவே உள்ளேயே சமையலறை ரெடி பண்ணியிருக்கோம். கொஞ்சம் காய்கறி வாங்கிட்டுப் போயும் கலக்கலாம். ஒரு சமையற்காரரைக் கூட்டிட்டுப் போயும் கலக்கலாம்!" என்கிறார் மலையப்பன் கலகலவென்று!

இந்த கேம்பர் வேனுக்கான ஒரு நாள் வாடகை ஐயாயிரம் ரூபாய்!

தேர்தல் வருகிற நேரத்தில் பிரசார வேனாக இதைப் பயன்படுத்திக் கொள்ள பலர் நான் முன்னே நீ முன்னே என்று முட்டிக்குவாங்களோ...?

— அப்பு

# அந்த ஐம்பத்தோரு ரூபாய்...!

"**நா**ன் முதல் தடவை மேடையேறிய போது எனக்கு வயது எட்டு. நன்றாகப் பாடுவேன். நவராத்திரி பண்டிகையின்போது, ஆங்காங்கே திருவிழாக்கள் நடக்கும். நாங்கள் போயிருந்த நிகழ்ச்சியில், திடீரென என்னைக் கூப்பிட்டுப் பாடச் சொல்லிவிட்டார்கள். அப்போது மிகப்பிரபலமாக இருந்த ஒரு சினிமாப் பாடலை நான் பாடினேன். பலத்த கைத்தட்டல். ஒன்ஸ்மோர் கேட்டார்கள். ஒருவர், எனக்கு ஐம்பத்தோரு ரூபாய் பரிசுகூடக் கொடுத்தார். இன்று பாடி, எவ்வளவு சம்பாதித்தாலும் கூட அந்த ஐம்பத்தோரு ரூபாயின் மதிப்பு அலாதிதான்!" என்கிறார் இந்தியாவின் முன்னணி கஜல் பாடகரான பங்கஜ் உதாஸ். சமீபத்தில் சென்னை வந்திருந்த அவரிடம் கேட்டோம்:

"கர்நாடக இசையை ரசிப்பது உண்டா?"

"யெஸ். நான் பாலமுரளியின் ரசிகன். ஹரிஹரன் என் நெருங்கிய நண்பர். அடிக்கடி நாங்கள் சந்தித்துக் கொள்வோம். அப்போதெல்லாம் அவரை கர்நாடக இசை பாடல்கள் பாடச் சொல்லிக் கேட்டு ரசிப்பேன்."

"குரல் வளத்தைப் பராமரிக்க என்ன பண்ணுகிறீர்கள்?"

"வழக்கமாய் எல்லா பாடர்களையும் போலத்தான். புகைபிடிப்பதில்லை; ஐஸ்கிரீம் சாப்பிடமாட்டேன்; ரொம்ப ஜில்லென்ற தண்ணீர் குடிக்கமாட்டேன்!"

"வடக்கு அளவுக்கு தெற்கே கஜல் பிரபலமாகாததற்கு என்ன காரணம்?"

"அதற்கு முக்கிய காரணம் மொழிதான். ஹிந்துஸ்தானி போல இல்லாமல், கஜல் உருதுக் கவிதைகளின் அடிப்படையில் ஆனது. எனவே, வடக்கில் அதற்கு நல்ல வரவேற்பு. இசையை ரசிக்க முடிந்தாலும், பொருள் புரிவது சிரமம் என்பதால்தான் தென்னிந்தியாவில் கஜல் அத்தனை பிரபலமாகவில்லை என்று நான் நினைக்கிறேன். ஆனால் ஒன்று, தென்னிந்தியாவில் திருவனந்தபுரம், கொச்சி, கோயம்புத்தூர், சென்னை உட்பட பல நகரங்களிலும் நான் கஜல் கச்சேரிகள் செய்திருக்கிறேன். திரளாக ரசிகர்கள் வருகிறார்கள் என்பது மகிழ்ச்சியளிக்கும் செய்தி."

"சினிமாவில் அதிகம் பாடியதில்லையே நீங்கள்! என்ன காரணம்?"

"நானும் சினிமாவில் பாடியிருக்கிறேன். எனது ஆல்பம் வெளியிடும் யுனிவர்சல் நிறுவனம் படங்கள் எடுக்கிறது. அதில் நான் பாடுகிறேன். ஆனாலும் சினிமாவில் பாடுவதில் எனக்கு ரொம்ப ஆர்வம் கிடையாது."

"ஏ.ஆர்.ரஹ்மான் பற்றி?

"முன்பு, இந்திப்பட உலகமும், தென்னிந்தியப் பட உலகமும், இசையமைப்பாளர்களைப் பரிமாற்றம் செய்து கொண்டதில்லை. இதனால் பெரும் இடைவெளி விழுந்திருந்தது. ஆனால் அந்த இடைவெளிக்குப் பாலம் கட்டிய பெருமை ரஹ்மானுக்கு உண்டு. அவர் அபாரமான திறமைசாலி! இசையில் இன்னும் புதிய சிகரங்களை அவர் தொடப் போகிறார்!"

— எஸ். சந்திரமௌலி

படம்: ஸ்ரீஹரி

# ஆங்கிலமே,

வி. ராஜகோபாலன்




● **ஸா**ர்... மானேஜர் இன்னொரு "லைன்ல" பேசிக்கிட்டிருக்கார். கொஞ்சம் லைன்ல இருங்க.

● இந்த ஏரியா ஒரு மாதிரி, கொஞ்சம் எச்சரிக்கையா இருங்க.

● நான் இன்னும் கொஞ்ச நேரத்துல அங்க வந்து உங்களை அழைச்சுக்கிட்டுப் போறேன். தயாரா இருங்க.

எச்சரிக்கையா இருங்க.

தயாரா இருங்க.

கொஞ்சம் லைன்ல இருங்க.

இதையெல்லாம் 'Be' ங்கற வார்த்தையை use பண்ணி இங்கிலீஷ்ல ஈஸியா சொல்லிடலாம்.

"Careful" - எச்சரிக்கையாக, 'Be careful' - எச்சரிக்கையா இரு.

'Ready' - தயாராக.

'Be ready' தயாராக இரு.

இதே போல

Bold - தைரியமாக

Be bold - தைரியமாக இரு.

Happy - சந்தோஷமாக

Be happy - சந்தோஷமாக இரு

என்று சொல்லிக் கொண்டே போகலாம்.

ஆனால் தொலைபேசியில் உரையாடும்போது 'கொஞ்சம் லைன்'ல இருங்க' என்பதை Be on the line என்று சொல்வதைவிட Hold on the line என்று சொல்வது நல்லது.

சரி, மானேஜர் இன்னொரு லைன்ல பேசிக்கிட்டிருக்காரு. கொஞ்சம்




'லைன்ல' இருங்க என்பதை எப்படிச் சொல்வீர்கள்?

Sir, the manager is talking over the other line. Please hold on the line.

என்ன ஸார், இவ்வளவு பெரிய வாக்கியமா? என்று உங்களுக்குச் சற்று மலைப்பாக இருந்தால்,

The manager is talking over the other line என்பதைச் சுருக்கமாக 'The manager is on the other line' என்று சொல்லலாம்.

இப்போ எல்லாத்தையும் சேர்த்து The manager is on the other line. Please hold on (the line) என்று சொல்லுங்கள்.

Please hold on the line என்பதை இன்னும் பணிவாக 'Could you please hold on the line?' என்றும் கேட்கலாம் அல்லவா?

சரி, தொலைபேசியில் உங்களிடம் பேசுவோரது குரல் உங்களுக்குச் சரியாக காதில் விழவில்லை என்பதை 'Sorry I can't hear you' (ஐ கான்ட் ஹிய(ர்) யு) என்று சொல்லுங்கள்.

கொஞ்சம் சத்தமாக (உரக்க) பேசுங்கள் என்பதை 'Speak louder' என்றுதான் சொல்ல வேண்டும்.

'Speak louder please' தயவு செய்து சற்று உரக்கப் பேசுங்கள். இதை 'Be louder please' என்றும் சொல்லலாம்.

சரி, இப்பொழுது எல்லாவற்றையும் சேர்த்துச் சொல்லலாமா?

Sorry, I can't hear you. Be louder please. மன்னிக்கவும். நீங்கள் பேசுவது சரியாகக் காதில் விழவில்லை. தயவு செய்து கொஞ்சம் சத்தமாகப் பேசுங்கள்.

# அருகில் வா!

## காதுல போட்டுக்குங்க!

நம் காதில் விழும் சத்தங்களை (நமது முயற்சி எதுவும் இல்லாமல்) நாம் கேட்க நேரிடுகிறது. இதை 'hear' என்கிறோம். I heard a loud noise என்றால் பலத்த சத்தம் எனக்குக் கேட்டது என்று அர்த்தம்.

ஆனால் மற்றவர் பேசுவதை சற்று உன்னிப்பாகக் கவனித்துக் கேட்பதை 'listen' என்று சொல்ல வேண்டும். Listen to me என்றால் நான் சொல்வதை (கூர்ந்து) கவனி என்று அர்த்தம்.

நான் சொல்வதை யாருமே காதுல போட்டுக்கலை என்பதை




Nobody listened to mennு சொல்லுங்க.

சில பேர் போன்ல பேசும்போது தொண்டை கிழிய காட்டுக் கத்தலாகக் கத்துவதுண்டு.

இது போல ஆளுங்ககிட்ட பேசும் போது ரிஸீவரைக் காதிலிருந்து கொஞ்சம் தள்ளி வச்சுக்கறது நல்லது.

சரி, இது போல தொண்டை கிழிய கத்தறவங்களிடம் ஸார், கொஞ்சம் மெதுவாப் பேசுங்கன்னு எப்படிச் சொல்வீங்க?

இது என்ன ஸார் பெரிய விஷயம்? Slowlyன்னா மெதுவா. Speak slowlyன்னு சொல்லுவோம் என்கிறீர்கள்? சரிதான். ஆனா 'slowly'ங்கறதுக்கு பதிலா softlyங்கற (ஸாஃப்ட்லி) வார்த்தையை useபண்ணுங்க.

மத்த விஷயங்களை அடுத்த வாரம் பார்க்கலாம்.

# நடக்குமென்பார் நடக்கும்





**மேஷம்**

**கி**ரகங்கள் அவ்வளவா சாதகமா இல்லை. எந்தக் காரியத்துக்கும் எதிர்ப்பு இருக்கவே செய்யும். பொருளாதார நெருக்கடிகளைச் சந்திக்க வேண்டி வரும். ஆனா குடும்ப அமைதிக்குக் குறைவிருக்காது. சிலருக்குத் திருமணயோகம் கூடி வரலாம். பயணத்துல பாதுகாப்பு அவசியம். வெளி இடங்கள்ல சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்காதீங்க.



**ரிஷபம்**

**ப**ல நூதனமான தொழில்கள்ல ஈடுபட்டு சம்பாதிக்க முயற்சி செய்வீங்க. காத்து கொஞ்சம் சாதகமா வீசறதால, எதிர்ப்புகள் அடங்கி, பல காரியங்கள் வெற்றியடையும். வங்கிக் கடன் எதிர்பார்த்திருந்திங்கன்னா இப்ப கிடைச்சிடும். கலைஞர்களுக்குப் புகழ் கூடும். பணம் மட்டும் நிறைய செலவழியும். தூக்கமின்மையால அவஸ்தைப்படுவீங்க. சிலருக்கு உஷ்ண சம்பந்தமான உபாதைகள் ஏதாவது ஏற்படலாம்.



**மிதுனம்**

**வி**சேஷமான பலன்களை இப்ப எதிர்பார்க்காதிங்க. வழக்கமான காரியங்கள் சுமுகமாவே நடந்தாலும் புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடறது நல்லது. பணம் ஒரு பிரச்னையா இருக்காதுன்னாலும் செலவு எக்கச்சக்கமாவே இருக்கும். சிலருக்கு உத்யோக ரீதில இடமாறுதலுக்கு வாய்ப்பிருக்கு. சிலருக்கு பூச்சிக்கடி அலர்ஜி வரலாம். எதிலும் கவனம்; படபடப்பின்மை, கோபமின்மை இப்ப ரொம்ப முக்கியம்.



**கடகம்**

**பெ**ண்களால ஏதாவது எதிர்பாராத ஆதாயம் கிடைக்கும். உங்க நீண்ட நாள் கனவு நனவாகப் போவுது. சிலருக்கு லாட்டரி மாதிரி அதிர்ஷ்டம் அடிக்கவும் வாய்ப்பிருக்கு. பயணங்கள் சாதகமா அமையும். நண்பர்கள் உதவுவாங்க. சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. கொஞ்ச நாள்ல மனசுல இருந்து வந்த குழப்பமும் சஞ்சலமும் விலகி மன அமைதி பெறுவீங்க. தெய்வ பலம் கூடி இருக்கிற நேரம் இது.

**கும்ப ராசிக்காரரான ராஜீவ் மேனனுக்கு செயல்திறன் மேம்படுமாம்!**



**சிம்மம்**

**ஆ**ற்றல் வெளிப்படற வாரம். அரசாங்கத்துல ஏதோ ஒரு பெரிய லாபம் வரப் போவுது. மொத்தமா பணம் கிடைச்சா கவனமா இன்வெஸ்ட் பண்ணுங்க. இப்ப வீடு, மனை வாங்கறது மட்டும் வேணாம். நிர்வாகம், கணிதம் எழுத்துத் துறையினருக்கு இது பொற்காலம். பெண்களுக்குப் பிறந்த வீட்டிலிருந்து ஏதாவது சொத்து கிடைக்க வாய்ப்புண்டு.



**கன்னி**

**பு**திய பதவிகள், பொறுப்புகள் வரும். பணிச்சுமை அதிகரிக்கும். வியாபாரிகளுக்கு லாபகரமான வாரம் இது. வெளிநாட்டு முதலீடுகள் கிடைக்க வாய்ப்பிருக்கு. அரசுப் பணியாளர்களுக்கு ஊதிய உயர்வு இருக்கும். சிலருக்கு வெளிநாடு போகற வாய்ப்பு

**அக்னி சர்மா பக்கம்**

வரும். தொலைபேசி மூலமா ஒரு நல்ல தகவல் அவசியம் வரும். வீட்டுப் பிராணிகளால் சிறு உபத்திரவங்கள் உண்டாகும்.



துலாம்

**து**ணிச்சலா செயல்பட்டு பல செயற்கரிய காரியங்களை செய்து முடிப்பீங்க. புகழுக்குப் பஞ்சமிருக்காது. ஆனா, பண நடமாட்டம் அவ்ளோ திருப்திகரமா இருக்காது. இழுபறிதான். கடன் கொடுக்கவோ வாங்கவோ வேணாம். வீட்டுல ஏதாவது சுபகாரியங்கள் நடக்கும். திருமணயோகம், பையன்களுக்கு கூடி வரும். உத்யோக ரீதில ஏதாவது இடமாறுதல் வரலாம்.



விருச்சிகம்

**க**ணவன் மனைவி உறவுல சில புதிய பரிமாணங்கள் ஏற்படும், நல்ல விதமாத்தான். விருந்து, விசேஷம்னு வீடுகளை கட்டும். கலைஞர்களுக்குப் பாராட்டு கூடும். சிலருக்கு வராத பழைய பாக்கிகள் வந்து சேரும். சமூக சேவகர்களுக்கு ஏதாவது விருது கிடைக்கலாம். ஆசிரியர்கள், கணிப்பொறித் துறையினருக்கு இது வசந்த காலம்.



தனுசு

**கி**ரகங்கள் சாதகமா இல்லை. கவனமா நடந்துக்க வேண்டியது அவசியம். புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடுங்க. வியாபாரத்துல சறுக்கல்கள் வரலாம். வழக்குகள் இழுத்தடிக்கும். வரவேண்டிய பணம் வராது. வீட்டுலயும் சிறு சலசலப்புகள், சண்டைகள் உருவாகலாம். அண்டை வீட்டாருடன் நல்லுறவு கொள்ள வேண்டியது அவசியம். பத்து நாள்ல நிலைமை சீராயிடும்.



மகரம்

**ப**த்திரிகையாளர்கள், கணிதத் துறையினருக்கு இது ஓஹோ வாரம். பொருளாதார ரீதில நல்ல வளர்ச்சி தெரியும். நீண்டநாள் ஆசை ஒண்ணு பெண்களுக்கு இப்ப நிறைவேறும். திருமணயோகம் கூடி வரும். சிலருக்கு குழந்தை பிறக்கவும் வழிவுண்டாகும். வீட்டுல ஒரு சுபகாரியம் நடக்கும். அதன்மூலம் செலவு கூடினா சுமையாவா தெரியும்?



கும்பம்

**ஆ**ற்றல் ஓங்கும், செயல் திறன் மேம்படும். குடும்ப விழாக்களை முன்னின்று சிறப்பா நடத்துவீங்க. வயசானவங்களுக்கு பாரின் டூர் போற வாய்ப்பு உருவாகும். சிலருக்கு அரசு மூலமா ஏதாவது நல்லது நடக்கலாம். மக்கள் நலன்ல அக்கற அவசியம். ஏதாவது உடல் நலக் குறைவு ஏற்பட்டு விலகலாம். சிலருக்கு பக்திமார்க்கத்துல மனம் லயிக்கும். தரும காரியங்கள்ல ஈடுபடுவீங்க.



மீனம்

**வீ**டு வாங்கற யோகம் இருக்கு. நண்பர்கள் உதவ முன் வருவாங்க. பண்ணையார்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் சாதகமான பல பலன்கள் இப்ப ஏற்படும். ஆனா, அரசியல்வாதிகள் அடக்கி வாசிக்கறது நல்லது. சிறு விபத்து அல்லது நாய்க்கடிக்கு வாய்ப்பு இருக்கு. இரவுப் பயணத்துல எச்சரிக்கையா இருங்க.

## 'ஜிகினா' போட்டி முடிவு

***ஜி**கினா தொடரின் எழுத்தாளர்கள் முறையே 1. சீதாரவி 2. சுபா 3. பட்டுக்கோட்டை பிரபாகர் 4. இந்திரா சௌந்தர்ராஜன் 5. ஆர். வெங்கடேஷ் 6. பத்மா ரவிசங்கர் 7. ரிஷபன் 8. எஸ். சங்கர நாராயணன் 9. அனுராதாரமணன் 10. பா. ராகவன்.*

*போட்டியில் கலந்து கொண்ட நூற்றுக் கணக்கான வாசகர்களுள் ஒருவர்கூட அனைத்து விடைகளையும் சரியாக எழுதவில்லை. அதிகபட்சம் ஐந்து ஆசிரியர்களின் பெயர்களைச் சரியாக எழுதியவர்கள் மூன்றுபேர்.*

*இந்த மூவரில் ஒருவர் குலுக்கலில் தேர்வாகி, தங்கச் சங்கிலி பரிசு பெறுகிறார்.*

*அந்த வாசகர் :*

அரிச்சந்திரன் (ஆர். ஸ்ரீனிவாஸ் பிரபு)
55, 'அனுகிரகா', காமராஜர் தெரு,
சர்ச் அருகில், வெட்டுவாங்கேணி,
சென்னை - 41.



என்கிறார்கள். பிரபுதேவா பெஸ்ட் ஹார்ட் சர்ஜன் என்கிறார்கள். ஆனால் காட்சி அமைப்புகள் ஆகட்டும், பிரபுதேவாவின் நடை, உடை, பாவனை, நடிப்பு ஆகட்டும் கொஞ்சம் கூட பொருந்தவே இல்லை. போதாதற்குப் படம் முழுவதும் பிரபுதேவா பேசும் கொச்சை தமிழ் வேறு. மெடிக்கல் காலேஜ் ஸ்டூடண்ட் என்றால் குறைந்தது ஒரு சுமாரான

# பெண்ணின் மனதைத் தொட்டு

பிரபுதேவாவும் ஜெயாசீலும் மெடிக்கல் காலேஜ் காதலர்கள். கட்டாயக் கல்யாணத்திலிருந்து தன்னைக் காப்பாற்றும்படி ஜெயாசீல், 'ஆதிமூலமே' என்று பிரபுதேவாவிற்கு அபயக்குரல் கொடுத்தும், தக்க சமயத்தில் வராமல் சொதப்பி விடுகிறார் பிரபுதேவா. பலன் - ஜெயாசீலின் அக்கா ஐஸ்வர்யா தற்கொலை செய்து கொண்டு காரியத்தை சாதிக்க வேண்டிய நிலைமை. வெறுப்பும் ஆத்திரமுமாக ஜெயாசீல் பிரபுதேவாவிடம் ஒரு பெரிய 'டூ' விட்டு விடுகிறார். ஆனால் பிரபுதேவா மேல் தவறில்லை என்பது கடைசியில் தெரியவர காதலர்கள் திரும்பவும் 'பழம்'!

மெடிக்கல் காலேஜ் பள்ளியிலாவது படித்திருப்பார் இல்லையா? என்னதான் அண்ணன் ஒரு பேட்டை ரௌடி என்றாலும் இவருடைய படிப்பு இவரைக் கொஞ்சம் கூடவா ரிஃபைன் பண்ணியிருக்காது? எழில் ஸார், 'ஃப்யூஜிடிவ்' படத்தையும் ஹாரிஸன் ஃபோர்டின் நடிப்பையும் ஒன்றுக்கு மூன்று நான்கு தடவைப் பாருங்கள். (உங்கள் படம்தான் நன்றாக ஓடுகிறதே, 'ரிலாக்ஸ்டு' ஆகவே பாருங்கள்) ஒரு சர்ஜனின் 'காரெக்டரை' எத்தனை ஆழமாக ஸ்டடி பண்ணி பிரஸண்ட் பண்ணியிருக்கிறார்கள் என்பது புரியும்.

ஆனால் பரவாயில்லை, விட்டதை எல்லாம் டைரக்டர் காதல் காட்சிகளில் பிடித்து விடுகிறார். குறிப்பாக ஜெயாசீலின் காதல் சொல்லப்பட்டிருக்கும் விதத்தில்.

பேச்சாளரின் தூய சிங்களத் தமிழைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறும் தங்கள் தொகுதி குடிசைவாசிகளுக்கு லோக்கல் தமிழில் விவேக்கின் இன்டர்ப்ரெட்டர் மொழிபெயர்க்கும் விதம் பிரமாதம் போங்கள்! ஆனால் விவேக்கின் 'பட்ட இடத்திலேயே படும்' காமெடி ஒன்றிரண்டு காட்சிகளுக்கு மேல் படுத்துகிறது!

டப்பாங்கூத்து பாடல்களை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம் என்று ராஜுசுந்தரமும் பிரபுதேவாவும் சொல்லி விட்டதால் எஸ்.ஏ. ராஜ்குமாருக்கு ஒரு பெரிய பொறுப்பு விட்டது. ஆனாலும், ஜேசுதாஸை ஞாபகப்படுத்தும் உன்னிமேனனின் பாடலுக்கான 'கிரெடிட்'ஐ அவருக்குத் தாராளமாக கொடுத்து விடுவோம்!

— கிருஷ்ணா சிதம்பரம்

# முகம்

எங்கோ எப்பவோ
பார்த்ததுபோல் ஞாபகப்படுகிறது
இன்றென் முகம்
என் முகங்களே
எனக்குப் பரிச்சயமில்லை
இது நீயென்று சுட்டிக்காட்டவும்
வேறொன்றின் அல்லது வேறொருவரின்
அறிமுகப்படுத்தல்
அவசியப்படுகிறது
நிரந்தர முகம்காட்டும் முயற்சியில்
முகமூடிகள் ஏற்படுத்தும்
மேலும் விகாரங்கள்.
எப்போதும் முகமூடியைத்
தக்க வைத்துக் கொள்ள முடிவதில்லை
சமயங்களில்
தெரிந்தே விடுகிறது
நிஜமுகம்.

—சிவசுகவிதா

கீழ்க்கண்ட படங்களுக்கும் ஆடி மாதத்திற்கும் என்ன சம்பந்தம்? கூட்டாகச் சேர்ந்து கொண்டும் யோசிக்கலாம். ஆடியில் தனித் தனியாகப் பிரிக்கப் பட்டிருக்கும் தம்பதிகள் தனித்தனியாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டும் கண்டுபிடிக்கலாம்.

உதாரணம் முதல் படத்திலுள்ள சீர்காழி கோவிந்தராஜன் "ஆடி அடங்கும் வாழ்க்கையடா" என்ற பாடலைப் பாடியிருக்கிறார்.


1. பாட்டு


2. இயக்கம்


3. கிரிக்கெட் பரிசு

# ஆடிப் புதிர்!


4. ஊர் – முதலும் முடிவும்


5. நூல் – முதலும் முடிவும்



6. ஒன்றிற்கொன்று

— ஜி.எஸ்.எஸ்


7. கதாநாயகி

**விடைகள்**

1. "ஆடி அடங்கும் வாழ்க்கையடா" பாடல் 2. ஆடி வெள்ளி படத்தை இயக்கியவர். 3. கிரிக்கெட் தொடர் ஒன்றில் மிக அதிக பாயிண்ட்டுகள் பெற்றதற்காக 'ஆடி' காரைப் பரிசாகப் பெற்றவர். 4. ஆலடி அருணா 5. ஆத்திச்சூடி 6. ஆடி (அதாவது கண்ணாடி) பிம்பங்கள் 7. ஆடிப்பெருக்கு படத்தின் கதாநாயகி.

# பயணிகள் கவனத்திற்கு

அப்பாவைக் காணவில்லை. வீட்டை விட்டுப் போய் ஒரு வாரமாயிற்று. இதுவரை எந்த தகவலும் இல்லை.

'காணவில்லை. பெயர் கிருஷ்ணசாமி. வயது ஐம்பத்திரண்டு. உயரம் சராசரிக்கும் சற்று அதிகம். மாநிறம். முன்புற வழுக்கை. இடது கன்னத்தில் காதுவரை வளைந்த தழும்பு. காணாமல் போனபோது வெள்ளை வேஷ்டியும், வெள்ளைச் சட்டையும் அணிந்திருந்தார். தகவல் தர வேண்டிய முகவரி: மணிமேகலை, மேற்குத் தெரு, முத்தூர் போஸ்ட், பொள்ளாச்சி. தகவல் தருபவர்களுக்குத் தக்க சன்மானம் அளிக்கப்படும். இப்படிக்கு உங்கள் நினைவால் வாடும் குடும்பத்தினர்' என்றெல்லாம் வீட்டில் யாரும் விளம்பரம் தரவில்லை.

அம்மா இன்றும் இயல்பாகவே எழுந்திருந்தாள். வாசல் தெளித்தாள். கோலம் போட்டாள். காப்பி போட்டு சர்க்கரை போதுமா என்றாள். குளித்துவிட்டு, தோட்டம் போனாள். மாட்டுக்குத் தீவனம் வைத்தாள். விறகிற்குக் காய்ந்த மட்டைகளை கட்டி வந்தாள். 'இட்லிக்கு என்ன சட்னி வேணும் கோபால்?' என்றாள் என்னிடம். தம்பியை அனுப்பி வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சச் சொன்னாள். எப்பொழுதும் போல் எல்லாம் நடந்தன.

அப்பா காணாமல் போனது இது முதல் முறையல்ல. அம்மாவின் கல்யாணத்திலிருந்து கணக்குப் போடலாம். எண்ணிக்கை நூறைத் தாண்டும். இரண்டு மாதத்திற்கு ஒருமுறை என்று வனவாசம். கல்யாணத்திற்குப் பிறகு-முதல் சண்டையில் அப்பா காணாமல் போக, அம்மா பதறிப் போனாள். ஊரைக்கூட்டி ஒப்பாரி வைத்தாள். போலீசுக்குப் போனாள். சாப்பிடாமல் தவித்தாள். தூங்காமல் அழுதாள். அடிக்கடி அப்படித்தான் என்று பாட்டி வந்து பதில் சொல்ல அம்மா அமைதியானாள். அப்புறம் அப்பா திரும்பி வந்தார். நடந்த சண்டை மறந்து போனார். கலபமாய் இயல்புக்குத் திரும்பினார். அம்மாவால் புரிந்து கொள்ள முடியவில்லை. புரியாமலே பழகிக் கொண்டாள்.

அப்பாவுக்கு முணுக்கென்றால் கோபம் வரும். எந்த கோணத்திலும் பேச முடியாமல் அம்மா திணறுவாள். சின்ன சண்டை என்றால் கோபம் தோட்டம் வரை நீடிக்கும். வீட்டிற்கு வரமாட்டார். சாப்பாட்டைப் புறக்கணிப்பார். அம்மா போய்த் தொடர்ந்து செய்யும் சமாதானத்தில் வீடு திரும்புவார். சில சண்டைகள் தொடரும். அப்பாவின் இயலாமை உச்சத்தைத் தொடும். அப்படியே அமைதி ஆவார். ஒதுங்கிப் போய் யோசிப்பார். அப்புறம் காற்றில் கரைந்த மாதிரி திடுமென காணாமல் போவார். எங்கு போகிறார். எங்கே தங்குகிறார். எங்கே சாப்பிடுகிறார். எதுவும் தெரியாது. யாரும்' முன் வந்து கேட்டதுமில்லை. அவரும் பின் வந்து சொன்னதுமில்லை. இன்று வரை விடை தெரியாத விசித்திரப் பயணம் அது!

ஒருமுறை பழனி கோயிலில் பார்த்ததாய் ராமலிங்க மாமா வந்து சொன்னார். இவரை பார்த்ததும் கூட்டத்தில் சட்டென மறைந்து கொண்டாராம். பிறகு எங்கு தேடியும் கிடைக்கவில்லையாம். கோயில் கோயிலாக சுற்றலாம். லாட்ஜில் தங்கலாம். ஆற்றில் குளிக்கலாம். ஹோட்டலில் சாப்பிடலாம். எல்லாம் எங்கள் யூகங்களிலேயே இருக்கிறது.

தோட்டக்கிணறு. குளிக்கிறபோது பழனிச்சாமி கேட்டான்.

"என்ன கோபாலு... அப்பா வீட்டுக்கு வந்துட்டாரா?"

"இல்லடா..." என்றேன்.

"கோவிச்சுட்டு எங்கதான் போவாருன்னு தெரியுமா?"

"இதுவரைக்கும் யாருக்கும் தெரியாதுடா..."

"ஏதாவது சின்ன வீடு வைச்சிருப்பாரோ...?"

எனக்குச் சிரிப்புதான் வந்தது. அவ்வளவு தைரியமான ஆசாமியாய் அப்பாவை கற்பனை செய்ய முடியவில்லை. நான் பதில் எதுவும் சொல்லவில்லை. தண்ணீரில் குதித்



**சரசுராம்**

தேன். சோப்பு கரைய நீந்தினேன்.

"இந்த தடவ என்ன சண்டை?" என்றான் பழனிச்சாமி சோப்பு தேய்த்தபடி.

"என்ன சொல்றது? கொஞ்சம் பணம் கேட்டேன்... அதான்..."

எதையும் பழனிச்சாமியிடம் மட்டுமே பகிர்ந்து கொள்வது பழக்கம். இருவரும் ஒன்றாய் வளர்ந்த கிராமம். ஒரே பள்ளிக் கூடம். தொடர்ந்து ஒரே கல்லூரி. பிரியாமல் ஒரே படிப்பு. பி.எஸ்ஸி பாட்டனி. படித்த படிப்பு விவசாயத்தைத் தொடர அவனுக்கு உதவுகிறது. இருக்கிற தோட்டத்தைக் கவனிக்க அவனுக்கு மேலும் ஆட்கள் தேவைப்படுகிறது. எனக்கு? இரண்டு ஏக்கரை வைத்துக் கொண்டு என்ன செய்து விட முடியும்? நான், அப்பா, தம்பி. இத்தனை பேர் இறங்கி உழைக்க என்ன இருக்கிறது? வயது இருபத்திநான்கை கடக்கிறது. எதிர்காலம் அடிவயிற்றில் பயமாய்ப் பரவுகிறது. நான் ஏதாவது செய்தாக வேண்டும். என்ன செய்ய? அதைத்தான் அப்பாவிடம் கேட்டேன்.

"எனக்கு விவசாயம் வேண்டாம்ப்பா. கொஞ்சம் பணம் தாங்க. வேற ஏதாவது தொழில் செஞ்சுக்கறேன்."

மிக அமைதியாய்த்தான் ஆரம்பித்தேன். அப்பா வேட்டியை மடித்துக் கொண்டு திரும்பினார். அம்மா அடுப்படியிலிருந்து எட்டிப் பார்த்தாள். தம்பியைக் காணவில்லை.

"மாட்டுக்குத் தண்ணி வைக்க சொன்னனே வச்சியா?" என்றார்.

''அத தம்பி வைச்சிருப்பான். நான் கேட்டதுக்குப் பதில் சொல்லுங்க...'' என்றேன்.

அப்பாவுக்குக் கோபம் வந்தது. அம்மா வெளியே வந்து நின்றாள்.

"பணமென்ன கொட்டியா கெடக்குது? விவசாயத்தைப் பார்த்துப் பொழச்சா போதும். அவ்வளவுதான் என்னால சொல்ல முடியும்!" என்றார்.

"நானும் எந்தம்பியும் ரெண்டு ஏக்கரை ஆளுக்கு ஒண்ணாப் பிரிச்சு நாசமா போக விரும்பல. எனக்காவது படிப்பு இருக்கு... அவனுக்கு அதுவும் பெருசா இல்ல. அவன் தோட்டத்த மொத்தமா வைச்சு பார்த்துக் கிட்டும். எனக்குக் கொஞ்சம் பணம் மட்டும் தாங்க. ஏதாவது பண்ணிக்கறேன்."

"அவன் சொல்றதிலும் ஏதோ நியாயம் இருக்குதுன்னு தோணுதுங்க. பேங்ல இருக்கிற பணத்த எடுத்து கொஞ்சம் அவன்கிட்ட தந்துதான் பாருங்களேன்'' அம்மா பேசினாள்.

இருமுனை தாக்குதல். இருவரும் ஏற்கெனவே சொல்லி வைத்து செய்கிற விதமாய் அப்பா பார்த்தார். இயலாமை தலைக்கேறியது. பேசி பிரயோஜனமில்லை. உஷ்ணம் மூக்கில் தெரிந்தது. சட்டையை மாட்டினார். மாட்டுக்குத் தீவனம் எடுத்துக் கொண்டார். செருப்பைப் போட்டார். கிளம்பிக் கொண்டார். தோட்டப் பக்கந்தான் என்று நினைத்தோம். தோட்டத்திற்கு வராததைத் தம்பி வந்து சொன்னான். வீட்டை விட்டுப் போயிருந்தார்!

பழனிச்சாமியிடம் நடந்ததைச் சொன்னேன். நிச்சயம் வருவார் என தைரியம் சொன்னான்.

ஈரத் துண்டை வாசலில் பிழிந்தேன். வீட்டிற்குள் நுழைய அப்பா வந்திருந்தார். என்னையறியாமல் சந்தோஷம் வந்தது. குளித்து அமர்ந்திருந்தார். அம்மா சாப்பாடு வைத்தாள். நான் எதுவும் பேசாமல் அவரை கடந்து போனேன். நிமிர்ந்து பார்க்கவில்லை அவர். தம்பி எதிர் சுவரில் எருவுக்குச் சாணி தட்டிக் கொண்டிருந்தான். துண்டை உதறிக் காயப் போட்டேன். அப்பா எழுந்தார். இயல்பு நிலைக்குத் திரும்பியிருந்தார். சட்டையைப் போட்டார். தோட்டத்திற்குக் கிளம்பினார். வாசலில் இறங்கியவரை நிறுத்தினேன்.

"நான் சொன்னத ஒரு வாரம் போய் யோசிச்சிருப்பீங்க.. என்ன முடிவு பண்ணியிருக்கிங்க...?" என்றேன்.

அப்பா ஆடிப்போய் நின்றார். திரும்பவில்லை. பழைய பிரச்னையை மீண்டும் கிளறின புதிய அதிர்ச்சி. அம்மா பதறியபடி வந்தாள். எதுவும் பேச வேண்டாமென ஜாடை காட்டினாள். நான் மாறாமல் பிடிவாதமாய் நின்றேன். எனக்கு பதில் தெரிந்தாக வேண்டும். ஆனால் அப்பா எதுவும் பேசவில்லை. துண்டை உதறினார். வெளியே நடக்கத் தொடங்கினார். மறுபடியும் அப்பா போய் விடக் கூடாதென அம்மா பின் தொடர்ந்து ஓடினாள். நான்



அமைதியாய்ப் பார்த்தபடி நின்றேன்.

நான் ஒரு முடிவுக்கு வந்தேன். பழனிச் சாமியிடம் ஆயிரம் ரூபாய் வாங்கினேன். காரணம் பிறகு சொல்கிறேன் என்றேன். தோட்டத்தில் அப்பா இருந்தார். அம்மாவும் தம்பியும் சமாதானப்படுத்திக் கொண்டிருந் தார்கள். துணிகள் கொஞ்சம் பெட்டியில் எடுத்துக் கொண்டேன். யாரிடமும் சொல்ல வில்லை. வீட்டை விட்டுக் கிளம்பினேன்.

சென்னை, கோடம்பாக்கம். என் கல்லூரி நண்பன். கார்த்திக் அறையில் வந்து தங்கினேன். ஆடிட்டிங் ஆபிஸில் கிளார்க். வந்த விஷயம் சொன்னேன். அவனும் உதவுவதாய் உறுதியளித்தான்.

அம்மா இன்னும் அழுதபடியே இருப் பாள். தம்பி பழனிச்சாமியிடம் திரும்பத் திரும்ப விசாரித்திருப்பான். அப்பா? வெளிப் பாட்டை கற்பனை செய்ய முடியவில்லை. யாரையும் தொடர்பு கொள்ளவில்லை நான். எதையும் அழுத்தமாய் யோசிக்கவில்லை. பத்தாவது நாள். வேலை கிடைத்தது. கார்த் திக் சிபாரிசு. இரண்டாயிரம் சம்பளம். இப் போதைக்கு இது போதும்.

பிறகுதான் வீட்டிற்கு என் முகவரி இணைத்து கடிதம் எழுதினேன்.

அன்புள்ள அப்பாவுக்கு,

ஒவ்வொரு பயணத்திலும் ஒரு அர்த்தம் இருக்கணும்னு நான் நினைக்கிறேன். உங்கள் பயணங்கள் இதுவரை உங்களுக்கு என்ன பலனளித்தது என்று எனக்குத் தெரியாது. ஆனால் எனக்குப் பயன்பட்டிருக்கிறது. வந்ததற்கு ஒரு வேலை கிடைத்திருக்கிறது. இதை வைத்து கொண்டு நான் மேலும் முன் னேறிக் கொள்வேன். யாரும் கவலைப்பட வேண்டாம்.

இப்படிக்கு
கோபால்.

அம்மாவிடமிருந்து பதில் வந்தது. தம் பியை வைத்து எழுதியிருந்தாள். நான் செய் வதில் எப்பொழுதும் நன்மையிருக்குமென நம்பிக்கை தெரிவித்திருந்தாள். தனியாய் தம்பியும் அன்பைப் பொழிந்தான். அப்பா எதுவும் சொல்லியிருக்கவில்லை. எதிர் பார்த்த பிடிவாதம்தான். என்றாலும் வருத் தம் வந்தது.

மாதத்திற்கு இரண்டு கடிதம் எழுதிக் கொள்கிறோம். விசேஷம் என்றால் பார்த்துக் கொள்கிறோம். இப்போதும் அப்பா மூணுக் கென்றால் கோபப்படுகிறார்.. அம்மாவுடன் சண்டையைத் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறார். ஆனால் எவ்வளவு பெரிய சண்டையிலும் அப்பா வீட்டை விட்டு மட்டும் போவதேயில்லை. ●

# கூட்டுறவு ஏ.டி.எம்!

பல்வேறு வங்கிகளும், தங்கள் வாடிக்கையாளர்களுக்கு, ஏ.டி.எம். என்கிற தானியங்கி பணப்பட்டுவாடா மிஷின் சேவையை அளிக்கின்றன. வாடிக்கையாளர் கள், தங்களுக்கு எந்த நேரத்தில் பணம் தேவைப்பட்டாலும், இந்தத் தானியங்கி இயந் திரங்களில், தங்கள் ஏ.டி.எம். அட்டையைச் சொருகி, பணம் எடுத்துக் கொள்ளலாம்.

இதில், விரைவில் ஒரு புதுமை வரப் போகிறது. ஏ.டி.எம். கார்டு வைத்திருப்பவர் கள், தாங்கள் கணக்கு வைத்திருக்கும் வங்கியின் ஏ.டி.எம்.மில் மட்டுமின்றி, வேறு எந்த வங்கியின் ஏ.டி.எம். மிலும்கூட தங்களது அட்டையைச் சொருகி பணம் எடுக்க முடியும்.



அதுமட்டுமில்லை. நீங்கள் கணக்கு வைத்திருக்கும் வங்கியில் ஏ.டி.எம். வசதி இல்லையென்றால்கூட, நீங்கள் ஒரு ஏ.டி.எம். அட்டையைப் பெற்றுக் கொண்டு, எந்த ஏ.டி.எம்.மிலிருந்து வேண்டுமானாலும் உங்கள் வங்கிக் கணக்கிலிருந்து பணம் எடுத் துக் கொள்ளுவதும் சாத்தியமாகப் போகிறது.

ஒரு ஏ.டி.எம். இயந்திரத்தை நிறுவ இருபத்து ஐந்து லட்ச ரூபாய் செலவு பிடிப்பதால் ஒவ்வொரு வங்கிக்கும், பல ஏ.டி.எம். களை அமைக்க கோடிக் கணக்கில் பணம் செலவாகும். அவ்வாறன்றி மற்ற வங்கிகளின் இயந்திரங்களைக் கொண்டே, தங்கள் கஸ்டமர்களுக்குப் பெரிய அளவில் ஏ.டி.எம். சேவை அளிக்க முடியும்.

இந்தத் திட்டத்தை முதலில் செயல்படுத்து வதற்கு, இந்திய வங்கிகள் சங்கம் தேர்ந் தெடுத்துள்ள நகரம் பெங்களூர். அதனை யடுத்து, தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது சென்னைதான்!

— கரூர் வைஸ்யா வங்கி சேர்மன் நவநீதன் கூறக் கேட்டவர் - கௌதம்.

# பொன்னியின் செல்வன்



பதினான்காம் அத்தியாயம்

## வானதியின் சபதம்

திடும் பிரவேசமாக உள்ளே புகுந்த ஆழ்வார்க்கடியானைப் பார்த்துக் குந்தவை "திருமலை! நீ எப்படி இங்கே வந்து முளைத்தாய்? எதற்காக வந்தாய்?" என்று கேட்டாள்.

''அம்மணி! எல்லாம் இந்த ஜோசியருடைய மோச்டி வார்த்தையினால்தான்! இன்று காலையில் இவரிடம் 'நான் போகும் காரியம் வெற்றிகரமாக முடியுமா?' என்று கேட்டேன். 'முடியும்' என்று சொன்னார். ஆனால் இந்த இடத்தை விட்டுச் சிறிது தூரம் போகக்கூட முடியவில்லை. காரியம் வெற்றி பெறுவது எப்படி? ஆகையினால்தான் சற்று முன் பழுவேட்டரையர் கூறியதை நான் ஆமோதித்தேன். இவருடைய ஜோதிட சாஸ்திரம் ஏமாற்றமா அல்லது இவர்தான் வேண்டுமென்று ஏமாற்றினாரா என்று கேட்டுத் தெரிந்து கொண்டு போக வந்தேன். பழுவேட்டரையரின் குரலை இங்கே கேட்டதும் இவர் பேரிலே எனக்குச் சந்தேகம் ஊர்ஜிதப்பட்டது. ஆனால் தங்களை இங்கு நான் எதிர்பார்க்கவேயில்லை'' என்றான்.

''என்னை நீ எதிர்பார்த்திருக்க முடியாதுதான். நீ எதற்காக வந்தாய்? என்ன காரியம் வெற்றி அடையுமா என்று ஜோதிடரைக் கேட்டாய்? இரகசியம் ஒன்றுமில்லையே?'' என்றாள் இளவரசி.

''தங்களுக்குத் தெரிய முடியாத இரகசியம் என்ன இருக்க முடியும்? சக்கரவர்த்தியின் கட்டளைப்படி நேற்றிரவே முதன்மந்திரி என்னை நாகைப்பட்டினத்துக்குப் போகும்படி ஏவினார்.

**அமரர் கல்கி**

இளவரசரைக் கையோடு அழைத்து வருவதற்காகத்தான் வழியில் செம்பியன்மா தேவியைப் பார்த்து அவரிடமும் ஓர் ஓலையைக் கொடுத்துப் போகும்படி ஏவினார்... தாங்கள் எப்போது தஞ்சையிலிருந்து கிளம்பினீர்கள், தேவி!''

''பொழுது விடிந்து சிறிது நேரத்துக்குப் பிறகு கிளம்பினோம். இதை ஏன் கேட்கிறாய், திருமலை?''

''கொடும்பாளூர்ப் படைகள் தஞ்சைக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டு விட்டனவா என்று தெரிந்து கொள்வதற்காகக் கேட்டேன்...''

''என்ன? என்ன?''

''ஆம், தேவி! தங்களுக்குத் தெரியாதா, என்ன? நேற்றிரவு சக்கரவர்த்தியைப் பார்த்துவிட்டு முதன் மந்திரி அவருடைய மாளிகைக்குத் திரும்பி வந்தபோது இரண்டு செய்திகள் காத்திருந்தன. ஒன்றுதான் நாகைப் பட்டினத்திலிருந்து இளவரசர் புறப்பட்டு வருகிறார், பெரும் ஜனக்கூட்டம் புடைசூழ வந்து கொண்டிருக்கிறார் என்பது...''

''அதை நானும் இன்று காலை அறிந்தேன். என் தம்பியை இங்கேயே தடுத்து நிறுத்திக் கொள்வதற்காகவே புறப்பட்டு வந்தேன். இன்னொரு செய்தி என்றாயே, அது என்ன?''

ஆழ்வார்க்கடியான் வானதியைச் சுட்டிக்காட்டி "அம்மா! இந்தக் கொடும்பாளூர் இளவரசியை எதற்காக அழைத்து வந்தீர்கள்?" என்று கேட்டான்.

''அவள் எப்போதும் வருவது போல் இப்போதும் வந்தாள்; அழைத்து வந்தேன். எதற்காகக் கேட்டாய்?''

''இரண்டாவது செய்தியை இந்த இளவரசி இருக்கும்போது சொல்லத் தயக்கமாயிருக்கிறது.''

"சொல், திருமலை! இவள் எனக்கு எவ்வளவு அந்தரங்கமானவள் என்பது உனக்குத் தெரியாதா? எனக்குத் தெரியக் கூடியது எதுவும் இவளுக்கும் தெரியலாம்..."

''ஆனாலும் இந்த இளவரசிக்குச் சம்பந்தப்பட்ட காரியம் அது. தென் திசைச் சேனாதிபதி பூதி விக்கிரம கேசரி ஒரு மாபெரும் சைன்யத்தைத் திரட்டிக்கொண்டு தஞ்சைக் கோட்டையை நெருங்கி வந்துகொண்டிருக்கிறார் என்று நேற்றிரவு முதன் மந்திரிக்குச் செய்தி வந்தது. சேனாதிபதியிடமிருந்து ஓர் ஓலையும் முதன் மந்திரிக்கு வந்தது. சக்கரவர்த்தியைத் தஞ்சைக் கோட்டையிலும் சின்ன இளவரசரை ஏதோ ஓர் இரகசிய இடத்திலும் பழுவேட்டரையர்கள் சிறைப்படுத்தி வைத்திருப்பதாக அதில் குற்றம் சாட்டியிருந்தது. பழுவேட்டரையர்கள் தனாதிகாரி பொறுப்பையும் தஞ்சைக் காவல் பொறுப்பையும் உடனே விட்டு நீங்க வேண்டும் என்றும், இளவரசரைக் கொண்டு வந்து ஒப்புவிக்க வேண்டும் என்றும் எழுதியிருந்தது. இல்லாவிட்டால் இன்று மாலைக்குள் தஞ்சைக் கோட்டையைச் சுற்றி முற்றுகை ஆரம்பமாகிவிடும் என்று எழுதியிருந்தது. அம்மணி! தஞ்சைக்குத் தெற்குத் திசையிலும் மேற்குத் திசையிலும் ஏற்கெனவே கொடும்பாளூர்ப் படைகள் நெருங்கி வந்து விட்டனவே? தங்களுக்குத் தெரியாதா?''

''தெரியாது. முதன்மந்திரி இதைப் பற்றி ஒரு வார்த்தையும் என்னிடம் சொல்லவில்லையே?''

''சொல்லியிருந்தால் நீங்கள் ஒருவேளை தஞ்சைக் கோட்டையை விட்டுப் புறப்பட்டிருக்க மாட்டீர்கள். முக்கியமாக, கொடும்பாளூர் இளவரசியை உடனே வெளியேற்றிவிட முதன்மந்திரி விரும்பியிருக்கலாம்...''

''அது ஏன்? இவள் அங்கு இருந்தால் என்ன நேர்ந்து விடும்?''

''இந்த இளவரசியைச் சின்னப் பழுவேட்டரையர் ஒருவேளை சிறைப்படுத்தினாலும் படுத்தி விடுவார்...''

''அவ்வளவு துணிச்சல் அவருக்கு வந்து விடுமா? மெய்யாகவே இதை நீ சொல்கிறாயா?''

''ஆம், தேவி! மேலும் தென்திசைச் சேனாதிபதி சொல்லி அனுப்பிய செய்தியைக் கேட்டால் தாங்களே அறிந்து கொள்வீர்கள்...''

''என்ன? மேலும் என்ன?''

''இளவரசர் அருள்மொழி வர்மருக்கும் கொடும்பாளூர் இளவரசி வானதி தேவிக்கும் உடனே திருமணம் நடத்தியாக வேண்டும். ஆதித்த கரிகாலர் தமக்கு இராஜ்யம் வேண்டாம் என்று சொல்வதால் அருள்மொழிச் சோழரையே அடுத்த பட்டத்துக்கு உரியவராக யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார். இதற்கெல்லாம் சம்மதிக்காவிட்டால் தஞ்சைக் கோட்டையை மூன்றே நாளைக்குள் தரை மட்டமாக்கி விடுவேன் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார். சோழ நாட்டு மக்கள் தம்மை ஆதரிப்பதாகவும் தெரிவித்திருக்கிறார்...



இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வானதி, ''அக்கா! என் பெரியப்பாவுக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டதா, என்ன?'' என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

''ஏன், வானதி, அப்படிச் சொல்கிறாய்? வெகு காலமாகப் பலர் மனத்தில் இருந்து விஷயத்தையே உன் பெரியப்பா இப்போது பகிரங்கமாக அறிவித்திருக்கிறார். பழுவேட்டரையர்கள் 'மதுராந்தகனுக்குப் பட்டம் கட்ட வேண்டும்' என்று முயற்சி தொடங்கியிருப்பதினால் கொடும்பாளூர் மன்னரும் திருக்கோவலூர் மலையமானும் இவ்விதம் வெளிப்படையாகச் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள்...''

''ஆம், தாயே! திருக்கோவலூர் மலையமான்கூட இதற்குள் ஒரு பெரிய சைன்யத்துடன் கடம்பூர் கோட்டைக்குச் சமீபம் வந்திருப்பார். என்னிடம் அவர் பேசியதிலிருந்தே அவ்வாறுதான் ஊகித்தேன். முதன்மந்திரிக்கும் தகவல் கிடைத்திருக்கிறது...''

''ஆனால் இப்போது நான் அறிந்திருக்கும் செய்திகள் அவர்கள் இருவருக்கும் தெரியாது. அவர்கள் இரண்டு பேருடனும் நான் பேசி உள் நாட்டுச் சண்டை நேராமல் தடுத்தாக வேண்டும். எப்படிச் செய்யப் போகிறேனோ, தெரியவில்லை...''

''தாயே! நிலைமை இப்பொழுது மிகவும் முற்றிப் போய்விட்டது. இனிமேல் ஒரு பெரிய பாரத யுத்தம் நடந்தே தீரும் போலிருக்கிறது...''

''இதைப் பாரத யுத்தம் என்று கூறியது ரொம்ப சரி, திருமலை! இப்போது யுத்தம் மூண்டால் அது ஒரு சகோதரச் சண்டையாகத்தான் இருக்கும். உற்றார் உறவினருக்குள்ளே நிகழும் சர்வ நாச யுத்தமாக இருக்கும். வானதி! இதைக் கேள்! என் பாட்டனாரின் தகப்பனார் புகழ் பெற்ற பராந்தக சக்கரவர்த்தி, பழுவேட்டரையர் குலத்தில் பெண் கொண்டார். அவருடைய மகள், - என் சிறிய பாட்டி, - கொடும்பாளூரின் அரசரை மணந்துகொண்டார். என் பாட்டனார் அரிஞ்சயர் கொடும்பாளூர்ப் பெண்ணை மணந்துகொண்டார். என் தந்தையோ திருக்கோவலூர் மலையமான் மகளை மணந்திருக்கிறார். இப்படி இந்த மூன்று குலமன்னர்களும் எங்கள் குலத்துடன் நெருங்கிய உறவு பூண்டவர்கள். ஒன்றுக்குள் ஒன்றாக கலந்து போனவர்கள். ஆயினும் அவர்கள் இப்போது கச்சைக் கட்டிக் கொண்டு சண்டைக்கு ஆயத்தமாகி வருகிறார்கள்! இந்த விதியை என்னவென்று சொல்கிறது? - இவர்களுடைய சண்டையினால் சோழ ராஜ்ஜியமே அழிந்துவிடும் போலிருக்கிறது...''

''அக்கா! எனக்கு அதைப் பற்றியெல்லாம் கவலை இல்லை. எப்படியாவது சண்டை போட்டுக்கொண்டு சாகட்டும். ஆனால் இதில் என் பெயரை என் பெரிய தகப்பனார் எதற்காக இழுக்க வேண்டும்? உடனே திரும்பிப் போய் என் பெரியப்பாவைப் பார்த்துச் சண்டை பிடிக்க வேண்டும்



என்று தோன்றுகிறது...''

''அதனால் என்ன பயன், கண்ணே! நீ சொல்வதை உன் பெரிய தகப்பனார் கேட்க மாட்டார். நீயும் நானும் சேர்ந்து மன்றாடினாலும் பயன்படாது. சிறு வயதுப் பெண்களாகிய நாம் சொல்வதை உன் பெரியப்பாவைப் போன்ற கிழவர்கள் கேட்க மாட்டார்கள். என் தம்பி அருள்மொழிவர்மன் மூலமாகத்தான் இந்தச் சண்டை நேராமல் தடுக்க முடியும். திருமலை! நீ போனவன் ஏன் திரும்பி வந்தாய்? அருள்மொழி இப்போது எங்கே இருக்கிறானாம்?''

''திருவாரூரிலிருந்து நேற்றிரவே புறப்பட எண்ணியதாகக் கேள்வி. ஆனால் வழியெல்லாம் ஒரே வெள்ளக் காடாக இருப்பதால் வர முடியவில்லையாம். நானும் பழையாறைக்கு அப்பால் போகப் பார்த்து முடியாமல் திரும்பி வந்தேன். குடமுருட்டி உடைப்பெடுத்து ஒரே சமுத்திரமாகச் செய்திருக்கிறது...''

''எப்படியும் வெள்ளம் வடியும். அதற்குப் பிறகு அருள்மொழி இந்த வழியாக வந்துதானே ஆக வேண்டும்? அதுவரை காத்திருக்க வேண்டியதுதான். அதற்குள் தஞ்சையில் ஏதேனும் விபரீதம் நேர்ந்து விடப் போகிறதே என்று கவலையாயிருக்கிறது. திருமலை! நீ உடனே தஞ்சாவூர் திரும்பிப் போய்க் கொடும்பாளூர் மன்னரைக் கண்டு நான் சொல்லும் செய்தியைச் சொல்ல முடியுமா? அருள்மொழி வரும்வரையில் தஞ்சைக் கோட்டையை முற்றுகையிட வேண்டாம் என்று தெரிவிப்பாயா?''

''அக்கா! நானும் இவருடன் தஞ்சைக்குப் போகட்டுமா?''

"நீ இந்த மனிதருடன் போய் என்ன செய்வாய், என் கண்ணே!"

"போய் என் பெரிய தகப்பனாருடன் சண்டை பிடிப்பேன்..."

"என்னவென்று சண்டை பிடிப்பாய்? உன் பேச்சை அவர் கேட்டுச் சண்டையை நிறுத்தி விடுவாரா?"

"சண்டையை நிறுத்தினால் நிறுத்தட்டும்; நிறுத்தாவிட்டால் எப்படியாவது நாசமாகப் போகட்டும். என் பெயரை இதில் இழுக்க வேண்டாம் என்று வற்புறுத்துவேன்."

"உன் பெயரை இழுக்கிறார்களா? அது எதற்காக?"

"சற்று முன் இந்த வீர வைஷ்ணவர் சொன்னதை நீங்கள் கேட்கவில்லையா, அக்கா?" என்று வானதி கூறி வெட்கத்தினால் தலை குனிந்தாள்.

"உன்னைப் பற்றி யார் என்ன சொன்னார்கள்? திருமலை! நீ இந்தப் பெண்ணைப் பற்றி என்ன சொன்னாய்?"

"இவரைப் பொன்னியின் செல்வருக்கு மணம் செய்விக்க வேண்டும் என்று சேநாதிபதி வற்புறுத்துவதைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? அதைக் குறிப்பிடுகிறார் போலிருக்கிறது!"

"வானதி! அதில் என்ன உனக்கு ஆட்சேபம்? பொன்னியின் செல்வனை மணந்து கொள்வதற்கு உனக்குப் பிரியம் இல்லையா?"

"பிரியம் இருக்கிறதோ, இல்லையோ, அதைப் பற்றி இப்போது என்ன பேச்சு? கலியாணத்தையும் பட்டங் கட்டுவதையும் என் பெரிய தந்தை சேர்த்துப் பிரஸ்தாபிப்பதைத்தான், நான் ஆட்சேபிக்கிறேன். என்னைச் சோழ சிம்மாசனத்தில் ஏற்றுவிப்பதற்காகவே என் பெரிய தந்தை இந்தச் சண்டையை ஆரம்பிக்கிறார் என்றல்லவா ஏற்படுகிறது...?"

இச்சமயத்தில் ஒரு பெண்ணின் குரல், "கொடும்பாளூர் இளவரசிக்குச் சிம்மாசனம் ஏறுவது என்றாலே ரொம்ப வெறுப்புப் போலிருக்கிறது!" என்று கூறியதைக் கேட்டு எல்லாரும் அக்குரல் வந்த இடத்தைப் பார்த்தார்கள். அங்கே ஓடக்காரப் பெண் பூங்குழலி நின்று கொண்டிருந்தாள்.

குந்தவை அவளை வியப்புடன் பார்த்து, "பெண்ணே, நீ எப்படி இங்கே வந்தாய்? இன்று காலை உன்னையும் ஈழத்து ராணியையும் காணாமல் நாங்கள் தேடி அலைந்தோமே? உன் அத்தை எங்கே?" என்று கேட்டாள்.

"தேவி! மன்னிக்க வேண்டும்! என் அத்தை என்னைப் பலவந்தமாகப் பழுவூர் அரண்மனையின் சுரங்க வழியாகப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து கோட்டைக்கு வெளியே அனுப்பி விட்டாள். நான் தஞ்சை அரண்மனையில் ஒருநாள் இருப்பதுகூட என் அத்தைக்குப் பிடிக்கவில்லை! எனக்கும் அரண்மனை வாழ்வு பிடிக்கவில்லைதான்! கொடும்பாளூர் இளவரசிக்குச் சிம்மாசனமே வெறுத்துப் போயிருக்கும் போது, என்னைப் போன்றவர்களுக்கு அரண்மனையில் வசிக்க எப்படிப் பிடிக்கும்?" என்றாள் பூங்குழலி.

"பெண்ணே! எதையோ கேட்டால், எதையோ சொல்லுகிறாயே? உன் சித்தம் சரியான நிலையில் இல்லை போலிருக்கிறதே?" என்றாள் குந்தவை.

"அக்கா! அவள் சித்தம் சரியாகத்தான் இருக்கிறது. என்னைக் கேவலப்படுத்துவதற்காக வேண்டுமென்று இப்படிப் பேசுகிறாள். நான் சோழ நாட்டின் சிம்மாசனம் ஏறி மகாராணி ஆக வேண்டும் என்ற ஆசை கொண்டிருக்கிறேனாம்! அதற்காகத்தான் தங்கள் தம்பியை – பொன்னியின் செல்வரை – மணக்க விரும்புகிறேனாம்! இவளுடைய மனசு எனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிறது!" என்றாள் வானதி.

"பாம்பின் கால் பாம்பு அறியும் என்ற பழமொழி பொய்யாகப் போகுமா?" என்றாள் பூங்குழலி.

"பெண்களே! நிறுத்துங்கள்! எந்தச்

சமயத்தில் என்ன பேசுவது என்றே உங்களுக்குத் தெரியவில்லை. பூங்குழலி! உன் அத்தை இப்போது எங்கே இருக்கிறாள்?'' என்று குந்தவை கேட்டாள்.

''பழுவூர் மாளிகையைச் சேர்ந்த பொக்கிஷ நிலவறையில் இருக்கிறாள்...''

''எதற்காக?''

''அங்கே யாரோ ஒரு கொலைகாரன் கையில் வேலுடன் ஒளிந்துகொண்டிருக்கிறான். ஆகா! அவனை நாங்கள் இருவரும் இன்று அதிகாலையில் படுத்தி வைத்த பாட்டை நினைத்தால்! எங்கள் இருவரையும் இரண்டு பெண் பேய்கள் என்று நினைத்துக்கொண்டு அவன் மிரண்டு போய் அங்குமிங்கும் ஓடியதை எண்ணினால்...!'' என்று கூறி விட்டுப் பூங்குழலி கலகலவென்று சிரித்தாள்.


ந்தப் பெண்ணுக்குச் சித்தப் பிரமைதான் என்று குந்தவை மனத்தில் எண்ணிக்கொண்டு, ''அப்புறம் சொல்! அவன் யார்? எதற்காக அங்கே ஒளிந்திருக்கிறான்? உங்களுக்கு எப்படி அது தெரிந்தது?'' என்று கேட்டாள்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. தேவி! என் அத்தைக்கு வாய் பேச முடியாவிட்டாலும் காது கேளாவிட்டாலும், நமக்கெல்லாம் தெரியாத விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் அதிசயமான சக்தி உண்டு. அரண்மனையில் உள்ள யாரோ ஒருவரைக் கொல்லுவதற்காக அவன் அங்கே காத்திருக்கிறான் என்று எப்படியோ அறிந்துகொண்டாள். தேவி! பத்துத் தலை இராவணேசுவரனுடைய கைகளை உடைப்பதற்கு என் அத்தை பிரயத்தனப்பட்டாளே? அது எதற்கு என்று தெரியுமா?''

''தெரியாது; உனக்குத் தெரிந்தால் உடனே சொல்லு!''

''என் அத்தை இராவணன் கரங்களைத் தகர்க்க முயன்றதைப் பார்த்த போது நீங்கள் எல்லாரும் அவளைப் பிச்சி – பைத்தியக்காரி என்று நினைத்தீர்கள். ஆனால் என் அத்தை பிச்சி அல்ல. அந்த இராவணன் கைகளுக்கு மத்தியிலேதான் பழுவேட்டரையரின் நிலவறைப் பொக்கிஷத்துக்குப் போகும் சுரங்கப் பாதை இருக்கிறது...''

''ஆகா! அப்படியா?'' என்று குந்தவை அதிசயித்தாள்.

''ஈழத்து ஊமை ராணி சக்கரவர்த்தியின் அரண்மனைக்கு எப்படி வந்தாள் என்பதும் இப்போது தெரிகிறது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''இத்தனை நாளும் அரண்மனையிலிருந்த நமக்கு அப்படி ஒரு சுரங்க வழி இருப்பது தெரியாமற் போயிற்றே? இருக்கட்டும்; நீ ஏன் உடனே அரண்மனைக்கு வந்து எங்களிடம் இதையெல்லாம் சொல்லவில்லை? உன் அத்தையைத் தனியாக விட்டு, விட்டு ஏன் வந்து விட்டாய்?'' என்றாள் இளையபிராட்டி.

''அத்தையின் பிடிவாதந்தான் காரணம். அங்கே ஒளிந்திருப்பவனைத் தான் பார்த்துக் கொள்வதாகச் சொல்லி என்னை வெளியே அனுப்பி விட்டாள்!''

''ஏன்? ஏன்? அதைவிட முக்கியமான காரியம் எதற்காகவாவது உன்னை அனுப்பினாளா?''

''ஆம், அம்மணி!''

''அது என்ன, பெண்ணே!''

''பொன்னியின் செல்வருக்கும் ஏதோ ஆபத்து வரப் போகிறது என்று என்னுடைய அத்தை தன் அதிசய சக்தியினால் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். அவர் இருக்குமிடத்துக்குப் போகும்படி என்னை அனுப்பினாள்!''

''ஆகா! பொன்னியின் செல்வன் இருக்குமிடத்தைத் தேடித்தான் நீ போய்க் கொண்டிருந்தாயா? அப்படியானால் ஏன் நின்று விட்டாய்?''

''இல்லை, தேவி! உண்மையைச் சொல்லி விடுகிறேன். அரண்மனைக் காரியங்களில் இனிமேல் தலையிடுவதில்லையென்று தீர்மானித்து விட்டேன். கோடிக் கரைக்குப் போய்க்கொண்டிருந்தேன். வழியில் இந்த வீர வைஷ்ணவன் என்னைச் சந்தித்து இங்கே அழைத்துக் கொண்டு வந்தான்...! நீங்கள் இருப்பது



தெரிந்திருந்தால் வந்திருக்க மாட்டேன்!''

''பெண்ணே! அரண்மனை உனக்கு ஏன் அவ்வளவு வெறுத்துப் போய்விட்டது? எங்களை ஏன் பிடிக்காமல் போய்விட்டது? உன்னை யார் என்ன செய்து விட்டார்கள்?'' என்று இளையபிராட்டி குந்தவை கேட்டாள்.

''என்னை யாரும் எதுவும் செய்துவிடவில்லை. யார் பேரிலும் எனக்குக் குறையும் இல்லை. சில பேருக்குச் சிம்மாசனம் பிடிக்காமலிருப்பது போல் எனக்கும் அரண்மனை வாழ்வு பிடிக்கவில்லை! அவ்வளவுதான்!'' என்று பூங்குழலி கூறி விட்டு, வானதியைக் கடைக்கண்ணால் பார்த்து நகைத்தாள்.

அதைக் கவனித்த வானதி ஆவேசம் வந்தவள் போல் ஓர் அடி முன்னால் வந்து கூறினாள்: - ''அக்கா! இவள் மறுபடியும் என்னைத்தான் ஏசிக் காட்டுகிறாள். நான் சொல்கிறேன், கேளுங்கள். தங்கள் திருப்பாதங்களின் ஆணையாகச் சொல்கிறேன். ஆகாசவாணி பூமாதேவி சாட்சியாகச் சபதம் செய்கிறேன். பொன்னியின் செல்வர் இந்தக் கண்டத்திலும் தப்பிப் பிழைத்தாரானால், அவர் மனமுவந்து என்னைக் கரம் பிடித்து மணந்து கொண்டாரானால், அத்தகைய பெரும் பேறு எனக்குக் கிடைத்ததானால், தஞ்சை அரண்மனைச் சிம்மாசனத்தில் நான் ஒருநாளும் உட்காரவே மாட்டேன். இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!''

## பதினைந்தாம் அத்தியாயம்

# கூரை மிதந்தது!



ச் சந்தர்ப்பத்தில் கொடும்பாளூர் இளவரசி இம்மாதிரி ஒரு சபதத்தைச் செய்வாள் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அதைக் கேட்டு அனைவரும் திகைத்துப் போனார்கள்.

இளையபிராட்டி கோபமும், பரிதாபமும் கலந்து பொங்கிய குரலில், "பெண்ணே! இது என்ன சபதம்? எதற்காகச் செய்தாய்? இப்படியும் ஒரு மூடத்தனம் உண்டா? ஏதோ வெறி பிடித்தவள் போல அல்லவா பிதற்றி விட்டாய்?" என்றாள்.

"இல்லை, அக்கா! இல்லை! எனக்கு வெறி இல்லை. என் அறிவு தெளிவாயிருக்கிறது. பல நாளாக யோசித்து என் மனத்திற்குள் முடிவு செய்து வைத்திருந்ததையே இப்போது பலர் அறியக் கூறினேன்" என்றாள் வானதி.

அதற்குக் குந்தவை மறுமொழி சொல்வதற்குள் பூங்குழலியின் சிரிப்பு அவள் கவனத்தைக் கவர்ந்தது. அந்தப் பெண்ணுக்கு உண்மையிலேயே இப்போது வெறி பிடித்துவிட்டது போலத் தோன்றியது. முதலில் கலகலவென்று சிரித்தாள். பிறகு, முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு விம்மி விம்மி அழுதாள். பின்னர் திடீரென்று அழுகையை நிறுத்திவிட்டு மெல்லிய குரலில்,

"அலைகடலும் ஓய்ந்திருக்க
அகக்கடல்தான் பொங்குவதேன்?"

என்று பாடத் தொடங்கினாள்:

குந்தவை ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "இந்த இரண்டு பெண்களும் சேர்ந்து என் மனத்தையும் குழப்பிப் பைத்தியமாக்கி விடுவார்கள் போலிருக்கிறது. திருமலை! இளவரசரைப் பார்க்கப் புறப்பட்டவன் இவளை எதற்காக இங்கு அழைத்துக்கொண்டு திரும்பி வந்தாய்?" என்று கேட்டாள்.

"தேவி! பொன்னியின் செல்வரைச் சந்திப்பதற்குத்தான் புறப்பட்டுச் சென்றேன். வழியெல்லாம் ஒரே வெள்ளமாயிருந்தபடியால் போக முடியவில்லை. என்னைப் போலவே இவளும் தடைப்பட்டு நின்றதைப் பார்த்தேன். படகு சம்பாதித்துக் கொடுத்தால் தள்ளிக் கொண்டு போய்த் திருவாரூர் சேர்ப்பதாகச் சொன்னாள். அதற்காக ஜோதிடரிடம் திரும்பி வந்தேன். கோவிலுக்குப் பக்கத்தில் தங்கள் ரதப் படகைப் பார்த்ததும் சந்தோஷமாயிற்று. தங்களிடம் கேட்டுப் படகு வாங்கிச் செல்லலாம் என்று நினைத்தேன். ஆனால் பழுவேட்டரையார் ரதத்தோடு படகையும் கொண்டு போய் விட்டார்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"இப்போது என்ன யோசனை செய்கிறாய்? பழுவேட்டரையர் கூறியதையெல்லாம் நீயும் கேட்டுக்கொண்டிருந்தாய் அல்லவா?" என்றாள் குந்தவை.

"ஆம், தாயே! அதைக் கேட்ட பிறகு இங்கே வீண் போகும் ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகமாகத் தோன்றுகிறது. இந்தப் பெண் சொல்வதிலிருந்தும் சக்கரவர்த்தியை உண்மையிலேயே பயங்கரமான அபாயம் நெருங்கியிருப்பதாகத் தெரிகிறது. அது முதன்மந்திரிக்குக் கூடத் தெரியாது. ஆகையால் தாங்கள் கொடும்பாளூர் இளவரசியை அழைத்துக் கொண்டு உடனே தஞ்சாவூருக்குச் செல்லுங்கள். கொடும்பாளூர் படைகள் ஒரு வேளை கோட்டையை முற்றுகையிட்டிருந்தால் தங்களைத் தவிர யாராலும் அப்படைகளைத் தாண்டிக்கொண்டு போக முடியாது. வானதி தேவியும் தங்களுடன் வந்தால் அதிக வசதியாகப் போய்விடும். நான் இந்த ஓடக்காரப் பெண்ணைச் சமாதானப்படுத்தி

அழைத்துக்கொண்டு, ஒரு படகு சம்பாதித்துக்கொண்டு பொன்னியின் செல்வரிடம் போகிறேன். ஜோதிடரின் சீடனைப் படகு கொண்டு வருவதற்காக ஏற்கெனவே அனுப்பி விட்டேன்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

வானதி திடுக்கிட்டு எழுந்தவள் அவனை வெறிக்கப் பார்த்து, "முடியாது! முடியாது! பொன்னியின் செல்வரிடம்தான் போவேன்! செத்தாலும் அவர் காலடியிலேதான் சாவேன்!" என்றாள்.

அதைக் கேட்ட பூங்குழலி 'கிறீச்' என்ற குரலில் "வைஷ்ணவரே! நான் உம்முடன் வர முடியாது! கோடிக்கரையில் என் காதலர்கள் என்னை அழைக்கிறார்கள்! நள்ளிரவில் நெருப்பைக் கக்கும் என் காதலர்கள் என்னை அழைக்கிறார்கள்! இளவரசி ஓலை கொடுத்து அனுப்பினாரே, அந்த வாணர்குல வீரருக்குக்கூட என் காதலர்களை நான் காட்டினேன். அவர்களிடம் நான் போக வேண்டும்!'' என்று கூறினாள்.

இதுவரையில் இவர்களுடைய சம்பாஷணையில் கலந்து கொள்ளாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு திகைத்து நின்ற ஜோதிடர் இப்போது குறுக்கிட்டார். "அம்மா! அம்மா! எல்லாரும் சற்றுச் சும்மா இருங்கள்!" என்று இரைந்து கத்தினார்.

ஒரு நிமிடம் அங்கே பேச்சின் ஒலி நின்றிருந்தது. அப்போது வேறோர் ஒலி, - ரோமாஞ்சனத்தை உண்டாக்கும்படியான பேரொலி, - புயல் அடிக்கும்போது அலை கடலில் உண்டாகும் இரைச்சலையொத்த பேரோசை, - கேட்டது.

"தாய்மார்களே! இந்தச் சந்தர்ப்பம் பார்த்து நீங்கள் இந்தப் பாவியின் குடிசைக்கு வந்தீர்களே! நான் நாட்டுக்கெல்லாம் ஜோதிடம் சொல்லி வந்தவன். உங்களுக்கு எச்சரிக்கை செய்து அனுப்பாமல் இருந்து விட்டேனே?'' என்று ஜோதிடர் புலம்பினார்.

"ஐயா! இது என்ன? புதிய அபாயம் எங்களுக்கு என்ன வருகிறது?'' என்று குந்தவை கேட்டாள்.

''தாயே! அரசலாற்றில் வெள்ளம் பெருகி வடகரையை உடைத்துக்கொள்ளும் போலிருக்கிறது என்று காலையிலேயே என் சீடன் சொன்னான். அரசலாறு உடைத்துக்கொண்டால் அந்த ஜலமெல்லாம் காவேரியில் வந்து விழும். காவேரி கரை புரண்டால் இந்த ஏழையின் வீடு அடியோடு முழுகிப் போய்விடும். காவேரிக்கு வெகு சமீபத்தில் இந்த வீடு இருக்கிறது. வாருங்கள்! வாருங்கள்! வெளியே வாருங்கள்!" என்று ஜோதிடர் கதறிக்கொண்டு வீட்டை விட்டு வெளியே ஓடினார்.

எல்லாரும் அவரைத் தொடர்ந்து வெளியேறினார்கள். பீதி கொண்ட முகத்தோற்றத்துடன் ஜோதிடர் ''அதோ!'' என்று சுட்டிக் காட்டினார். அவர் சுட்டிக் காட்டிய தென்மேற்குத் திசையில் ஓர் அபூர்வமான காட்சி தென்பட்டது. அரைத் தென்னை மரம் உயரமுடைய ஒரு பசுமையான சுவர், - நீண்டு படர்ந்து ஓரளவு வளைந்திருந்த விசாலமான சுவர், - அந்த வீட்டை நோக்கி இரைச்சலிட்டுக்கொண்டு வந்ததைக் கண்டார்கள். காவேரியின் கரை உடைந்து நீர் வெள்ளம் அப்படிச் சுவரைப் போல் நகர்ந்து வருகிறது என்பதை அங்கிருந்த அனைவரும் ஒரு நொடியில் அறிந்துகொண்டார்கள்.

"அம்மா! வாருங்கள்! எல்லாரும் ஓடி வாருங்கள்! அம்மன் கோவில் மண்டபத்தின் மீது ஏறி நிற்கலாம்! தப்ப வேறு மார்க்கம் இல்லை! திருமலை என் சீடனைப் படகு கொண்டுவர அனுப்பியதே நல்லதாய்ப் போயிற்று! ஓடி வாருங்கள்!'' என்று சொல்லிக்கொண்டே ஜோதிடர் வழி காட்டினார்.

மற்றவர்களும் அவரைப் பின்பற்றினார்கள். பூங்குழலியின் வெறியெல்லாம் இப்போது போய்விட்டது. "தேவி! தாங்கள் சிறிதும் அஞ்ச வேண்டாம். இதைக் காட்டிலும் எத்தனையோ. பெரிய வெள்ளங்களை நான் சமாளித்திருக்கிறேன்!'' என்று கூறிக்கொண்டே

அவள் ஓடினாள். எல்லாருக்கும் முன்ன தாகக் கோவில் மண்டபத்தை அடைந்து அதில் தாவி ஏறினாள்.


தற்குள் வெள்ளம் கோவில் அருகிலும் வந்து சூழ்ந்துகொண்டு விட்டது. கீழே நின்றவர்களின் முழங்கால்வரை ஏறிவிட்டது. ஜோதிடரும் ஆழ்வார்க்கடியானும் தத்தித் தடுமாறி மண்டபத்தின் மீது ஏறினார்கள்.

குந்தவையும் வானதியும் மட்டும் இன்னும் கீழே நின்றார்கள்.

இருவரும் ஏற முயன்றார்கள். மேலே யிருந்த பூங்குழலி இளையபிராட்டி யின் கைகளைப் பிடித்துத் தூக்கி விட்டாள்.

வானதி மட்டும் கீழே நின்றாள். அவள் இரண்டு தடவை ஏற முயன்று இரண்டு தடவையும் கைதவறி விட்டு விட்டாள்.

மேலே இருந்த இரு பெண்மணிகளும் அவளைப் பிடித்து மண்டபத்தில் தூக்கிவிட முயன்றார்கள்.

பூங்குழலி ஒரு கரத்தையும் இளைய பிராட்டி குந்தவை ஒரு கரத்தையும் பிடித்துத் தூக்கினார்கள்.

வானதி சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய ஒரு கரத்தைப் பூங்குழலி பிடித்துக் கொண்டிருந்தது தெரிந்தது. உடனே அந்தக் கையை உதறினாள். அவள் பிடியிலிருந்து கையை விடுவித்துக்கொண்டாள்.

அந்த வேகத்தில் குந்தவை பிடித்திருந்த கரமும் நழுவிவிட்டது.

வானதி தொப்பென்று விழுந்தாள்; தண்ணீரிலேதான் விழுந்தாள். அதற்குள் தண்ணீர் அவளுடைய கழுத்து வரையில் ஏறிவிட்டது. கால் நிலை கொள்ளவில்லை. வானதி தண்ணீரில் மிதந்தாள். வெள்ளம் அவளை அடித்துக்கொண்டு போயிற்று.

இவ்வளவும் ஒரு கணத்தில் நடந்து விட்டது. மண்டபத்தின் மேலே யிருந்தவர்கள் "ஆகா!" என்று பரிதாப மாகக் கதறினார்கள்.

சில கண நேரத்துக்குள் வெள்ளம் வானதியைச் சோதிடர் வீட்டுக் கூரை மேல் கொண்டு போய்ச் சேர்த்தது. அந்தக் கூரை மேல் அவள் ஏறிக்கொண்டாள். "நல்லவேளை! அபாயம் ஒன்றுமில்லை!" என்று எண்ணினாள்.

மண்டபத்தின் மேலிருந்தவர்களும் அவளைப் பார்த்தார்கள். வீட்டுக் கூரை மீது தொத்திக் கொண்டதைப் பார்த்தார்கள். அவர்களும் "நல்லவேளை! அபாயம் ஒன்றுமில்லை. படகு வந்ததும் அவளை எப்படியும் தப்புவிக்கலாம்!" என்று கருதினார்கள்.

"கூரையை விட்டு விடாதே! கெட்டியாகப் பிடித்துக்கொள்!" என்று பலமாகக் கத்தினார்கள்.

வானதி சோதிடர் வீட்டுக் கூரையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தக் கூரையே அசைவது போலத் தோன்றியது. அடடா? வீடு இடிந்து விழுகிறதா, என்ன?

ஆம்; சோதிடர் வீட்டுச் சுவர்கள் இடிந்து விழுந்துவிட்டன. ஆனால் கூரை மட்டும் விழவில்லை!

கூரை வெள்ளத்தில் மிதக்கத் தொடங்கி விட்டது.

வானதி அந்தக் கூரையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு மிதந்தாள்.

கோவில் மண்டபத்தை நோக்கி திரும்பிப் பார்த்தாள்.

"அக்கா! நான் அவரைப் பார்க்கப் போகிறேன். பொன்னியின் செல்வரைப் பார்க்கப் போகிறேன். காவேரித் தாய் என்னை அவரிடம் கொண்டு போகிறாள்!" என்று கூவினாள்.

அவள் கூறியது அவர்கள் காதில் விழுந்திருக்கும். முக்கியமாகப் பூங்குழலியின் காதில் விழுந்திருக்கும், என்று மனப்பூர்வமாக நம்பினாள்.

ஜோதிடர் வீட்டுக்கூரை வெள்ளத்தில், மிதந்து சென்று கொண்டிருந்தது.

வானதியும் போய்க்கொண்டிருந்தாள்.

(தொடரும்)



# அம்மாவுக்குத் தெரியுமா ஆறு லட்சத்தின் பின்னணி?

திமுக. அரசு 1996ல் ஆட்சிக்கு வந்த பின் மதுபானக் கடைகள் ஏலம் நடந்தது. மதுபானக் கடைகளை ஏலம் எடுக்கும் வியாபாரிகள், ஏலம் அதிகத் தொகைக்குப் போகாமல் கட்டுப்பட்டு இருக்குமாறு பார்த்துக் கொள்ள ஒரு சிண்டிகேட் அமைப்பார்கள். இந்த சிண்டிகேட்டுக்கு அதிகாரிகளின் ஆதரவும் அரசியல்வாதிகளின் ஆதரவும் தாராளமாக இருக்கும். ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என்று பார்க்காமல் எல்லா கட்சி பிரமுகர்களையும் இந்த சிண்டிகேட் நன்கு 'கவனிக்கும்'. காரணம் அவர்கள் மூலம் பிரச்னை ஏதும் வந்து விடக் கூடாதல்லவா!

அப்படித்தான் திருச்செங்கோடு நகர அ.தி.மு.க. செயலாளராக இருந்தவருக்கு பதினைந்து லட்சரூபாய் கிடைத்தது. 'நம் தலைவியையும், மற்றும் அமைச்சர்களையும் அரசியல்ரீதியாக எதிர்க்க முடியாமல் பொய் வழக்கு போட்டிருக்கிறார் கருணாநிதி. அவரது ஆட்சியில் நடக்கும் மதுபான ஏல விவகாரத்தில் நமது கட்சி சார்பில் பங்கு பெறுவது அயோக்கியத்தனம் (?) என்று புழுங்கினார்கள் ரத்தத்தின் ரத்தங்கள். போயஸ் தோட்டத்துக்குப் புகார்கள் பறந்தன. விசாரணைக்காக அம்மாவால் அனுப்பப்பட்டவர்கள், சம்பந்தப்பட்ட நகரச் செயலாளரிடம் மிரட்டி இரண்டு லட்சத்தை 'கைப்பற்றி' வந்தார்கள். 'தப்பித்து விட்டோம்' என்று பெருமூச்சு விட்டார் நகரச் செயலாளர். ஆனால் சில நாட்களில் கட்சிப் பத்திரிகையில் 'கட்டம்' கட்டப்பட்டு வெளியேற்றப்பட்டார் அவர்!

அதன்பின் 1999ம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தல் வந்த போது 'வழி தவறிய' ரத்தங்கள் மன்னிக்கப்பட்டு கட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அந்த நகரச் செயலாளரும் சேர்த்துக் கொள்ளப்பட்டார். 'சரி... இனி பழைய விவகாரம் அவ்வளவுதான்' என்று மகிழ்ச்சி கூத்தாடினார் நகரச் செயலாளர். அந்த மகிழ்ச்சி சில நாட்கள்தான் நீடித்தது.

''மரியாதையாக மீதம் உள்ள பணத்தைக் கட்சி நிதியில் சேர்த்து விடவும்'' என்று சென்னையிலிருந்து தாக்கீது வந்தது. புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாவட்டச் செயலாளரும் கிடுக்கிப்பிடி போட, வேறுவழியின்றி, 'என்னிடம் மீதம் உள்ளது ஆறு லட்சம்தான்' என்று சரண்டரானார் அந்த நகரச் செயலாளர். அந்த ஆறு லட்சம்தான் கட்சி வளர்ச்சி நிதியாக அம்மாவிடம் சமீபத்தில் கொடுக்கப்பட்டது. இந்தத் தகவலை நமக்குச் சொன்ன மாவட்டச் செயலாளர் ஒருவர், 'ஆறு லட்சத்தின் பின்னணி அம்மா வுக்கு தெரியுமோ, தெரியாதோ? இப்போது எல்லா மாவட்டங்களும் நாமக்கல் மாவட்டத்தைப் போன்று கட்சி வளர்ச்சி நிதி கொடுக்க வேண்டும்' என்று அம்மா சொல்லி விட்டால் எங்கள் பாடு தாளித்து விடும்' என்று புலம்புகிறார்.

- சஞ்சயன்

'முன்னாள் அமைச்சர் கக்கன் தொண்டு நிறுவனம் - ஆள் இல்லாத கடை' என்ற பெயரைத் தாங்கியபடி இருக்கும் அந்தப் பெட்டிக் கடை, தஞ்சாவூர் பூச்சந்தை அருகேயுள்ள, அண்ணாநகர் பிரதான சாலையின் ஓரத்தில் அமைதியாகக் காட்சி தருகிறது. காலை ஏழரை மணிக்கு, பூட்டப்படாமல் சாத்தி வைக்கப்பட்டிருந்த கடையை, கவனிக்கத் தொடங்கினோம். கொஞ்ச நேரத்தில்




மிதிவண்டியில் வந்திறங்கிய ஒரு இளைஞர் கடையைத் திறந்து வைத்து விட்டுப் திரும்பிப் போய் விட்டார்.

முப்பது வயது மதிக்கத்தக்க பெண்மணி ஒருவர் கடையை நெருங்கினார். சேமியா பாக்கெட், ஷாம்பூ பாக்கெட், இரண்டையும் எடுத்துக் கொண்டு பத்து ரூபாய் நோட்டை, கடையிலிருந்த ஒரு பெட்டியில் போட்டார். கையோடு மீதிச் சில்லறையும் எடுத்துக் கொண்டு நகர்ந்தார். சிறிது இடைவெளிக்குப் பின் வந்த சிறுமி பென்சில் ஒன்றை எடுத்துக் கொண்டு சில காசுகளைப் போட்டு விட்டுப் போனாள். அடுத்து வந்தவன் ஒரு சிறுவன். அவனும் அதே மாதிரி.

அடுத்த அரை மணி நேரத்தில், ஆள் இல்லாத கடையில், தங்களுக்குத் தேவையானப் பொருட்களை எடுத்துக் கொண்டு, அதற்குரிய பணத்தைப் போட்டு விட்டுப் போனவர்களின் எண்ணிக்கை பன்னிரண்டு.

இந்தக் கடையை ஆரம்பித்தவர் இதே பகுதியைச் சேர்ந்த கண்ணன். டிப்ளோமா இன் ஏர்கண்டிஷன் அண்ட் ரெப்ஜிரேஷன் படித்திருக்கும் இவர், முன்னாள் அமைச்சர் கக்கன் பெயரில் இப்படியொரு கடையைத் தொடங்கியதன் பின்னணி குறித்து ஆர்வமாகப் பேசத் தொடங்கினார்.

"நான் வசித்து வரும், அண்ணாநகர் பகுதியை முன்பு பர்மா காலனி என்று அழைப்பார்கள். கள்ளச் சாராயம், அடிதடி என்று ஒருசிலர் செய்த தவறுகளால், எங்கள் ஏரியாவுக்கு 'ரவுடி இமேஜ்' வந்து விட்டது. இதனால் பல வகையில் பாதிக்கப்பட்டோம். நான் ப்ளஸ் ஒன் சேருவதற்காக சென்ற போது 'நீ பர்மா காலனி பையன் 'சீட் கிடையாது போ' என்று விரட்டினார்கள்! இது என் மனதை மிகவும் பாதித்து விட்டது. ஆனால் படித்த இளைஞர்கள் இங்கே பெருகப் பெருக.... இளைஞர்களின் முயற்சியாலும், காவல் துறையின் ஒத்துழைப்போடும் கள்ளச் சாராயத்தையும், ரவுடிகளையும் ஒழித்து விட்டோம். பர்மா காலனி இன்று அண்ணா நகர் என கௌரவமாக அழைக்கப்படுகிறது. இந்த நற்பெயரைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டும் என்றுதான், 'கக்கன் தொண்டு நிறுவனத்'தைக் தொடங்கி, 'ஆள் இல்லாத கடையை' நடத்தி வருகிறோம்" என்கிறார்.

"நான்கு மாதங்களுக்கு மேலாக கடை நடந்து வருகிறது" என்றவரிடம், "ஆள் இருக்கும் கடையிலேயே பலர் ஏமாற்றி விட்டுப் போய் விடும்போது இதைத் தொடர்ந்து நடத்த முடியுமா?" என்றால், அடுத்தகட்ட திட்டத்திற்கும் அவர் தயாராகி விட்டாராம். "இன்னும் பதினைந்து நாட்களில் ஆள் இல்லாத காய்கறிக் கடை தொடங்கப் போகிறோம். அதற்கான இடத்தைத் தருவதற்கு அண்ணா நகர் அங்காடி நிர்வாகிகள் சம்மதித்திருக்கிறார்கள். அதன் பிறகு தஞ்சை பேருந்து நிலையத்தில் ஆள் இல்லாத ஆனுறை விற்பனை மையத்தை தொடங்கப் போகிறேன். மனிதனை, மனிதன் முதலில் நம்ப வேண்டும். சிறுவர் சிறுமியர் மத்தியில் அந்த நம்பிக்கையை வளர்க்க வேண்டும்" என்ற கண்ணன், தனது சொந்தப் பணத்தில் இந்தக் கடையைத்

# ஆள் இல்லாத கடை!

தொடங்கியிருக்கிறார். செந்தில், கஜேந்திரன், தனசேகரன் உட்பட ஐம்பதுக்கும் மேற்பட்ட இளைஞர்கள் கண்ணனுக்குத் தோள் கொடுக்கிறார்களாம். ஆள் இல்லாத கடையில் கிடைக்கும் லாபத்தைக் கொண்டு வருட முடிவில், ஊனமுற்ற ஒருவருக்கு மூன்று சக்கர வாகனம் வாங்கிக் கொடுக்கப் போகிறோம்" என்கிறார்.

சிகரெட், பான்பராக் இரண்டுக்கும் இந்தியாவில் தடை விதிக்கக்கோரி, பிரதமர் வாஜ்பாய்க்கு அனுப்ப, ஒரு கிலோ மீட்டர் நீளத்திற்குக் கையெழுத்துச் சுருளையும் கண்ணன் தயார் செய்து கொண்டிருக்கிறார். அதில் காஞ்சி ஜெயேந்திர சுவாமிகள் உட்பட பல விஐபிக்களின் கையெழுத்துகளையும் வாங்கி வைத்திருக்கிறார்!

— ஆர். சி. ஜெயந்தன்

படங்கள் : தஞ்சை ஆர்.எஸ். ராஜா



பாராட்டுபவை பிராணிகள் என்பது என் உறுதியான கருத்து. ஆனால் அந்தப் பிராணிகளை நாம், மரியாதையாக, மனிதத்தனத்தோடு, கண்ணியமாக நடத்துகிறோமா? அவற்றுக்கு எத்தனை கொடுமை இழைக்கிறோம்? சுதந்தரமாக சுற்றித் திரிய வேண்டிய பறவைகளை நமக்கு மன அமைதி கிடைக்கும் என்பதற்காக கூண்டில் அடைத்து வேடிக்கை பார்க்கிறோம். கூண்டுகளில் இருக்கும் பறவைகளைப் பார்த்தால், அவற்றை வெளியே எடுத்து சுதந்தரமாக பறக்க விட வேண்டுமென்று கை பரபரக்கிறது. பாரிமுனை, கோயம்பேடு பக்கம் செல்லும்போது, வண்டி நிறைய மூட்டைகளை வாயில் நுரை தள்ளியபடி இழுக்க முடியாமல் இழுக்கும் காளைகளைப் பார்த்தால் மனம் ரணமாகிப் போகிறது. இதை விடுங்கள். கையில் குச்சியை வைத்துக்கொண்டு குரங்கை, 'ஆடு ராமா' என்று அடித்து, குட்டிக்கரணம் போட வைத்துச் சம்பாதிப்பவர்களை நாலு சாத்து, சாத்தினால் என்ன

# "உயிர்களிடத்தில் அன்பு வேணும்!"

கற்பனைக்கேற்றபடி வாழ்க்கையில் நடக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பவள் அல்ல நான். என்னுடைய ஆசைகளும், விருப்பங்களும் மிகவும் சராசரியானவைதான். படிப்பில் ஆகட்டும்; தொழிலிலாகட்டும்; இதுவரை என் ஆசைகள் நிறைவேறியுள்ளன என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் என் மனத்தில் நீண்ட காலமாக உறுத்திக்கொண்டிருக்கும் ஒரு விஷயம், என்னால் தனிப்பட்ட முறையில் எதுவும் செய்ய முடியவில்லையே என்பதுதான். எந்தவித பிரதிபலனும் எதிர்பாராது நம்மிடம் அன்பு

என்று தோன்றுகிறது.

சமீபத்தில் ஒரிஸ்ஸாவில் மனிதனின் அலட்சியத்தால் புலிகள் இறந்து போனதைப் பற்றித் தெரிய வந்தபோது இதயம் கனத்துப்போனது. "மிருகங்களுக்கு எதிரான கொடுமைகளைத் தடுத்து நிறுத்த ஏதாவது செய்ய வேண்டும்" என்ற என் மன ஓட்டத்துக்கு சரியான செயல் வடிவம் கொடுக்க முயற்சி செய்கிறேன். பல்வேறு காரணங்களால் அது தள்ளிப் போய்க்கொண்டே இருக்கிறது. காலப் போக்கில் என் விருப்பம் கைகூடும் என்ற நம்பிக்கை இருக்கிறது.

— ரமா

**வி.ஐ.பி. விருப்பம் — 'பெப்ஸி' உமா**

# சாதனை

## யூஎஸ் 64 அதிகப்படி வரிவிதிப்பில்லா டிவிடென்ட் 13.75%* வழங்கியது.

US 64

எதிர்மறையான மார்க்கெட் நிலவரங்களுக்கு ஈடு செய்யும் தன் இணக்கத்தை மீண்டும் நிரூபிக்கும் வகையில் யூஎஸ் 64 ஜூன் 30. 2000 அன்று முடிவான ஆண்டிற்கு ஒரு வரிவிதிப்பில்லா 13.75* சதவீத டிவிடென்டை அறிவித்துள்ளது. மேலும் ஜூலை மாத விசேஷ விற்பனை விலையாக ரூ.13.50 இருப்பதால், யூஎஸ் 64 திட்டத்தில் புதிய முதலீடு செய்வதை நீங்கள் தவிர்க்கவே முடியாது. சாதனை படைத்த திட்டத்துடன் சேர்ந்து உங்கள் எதிர்காலத்தை வலுவாக்குங்கள்.

**ஜூலை விசேஷ விலை ரூ.13.50**

**உங்கள் எதிர்காலத்தை வலுவாக்குங்கள்**

* முக மதிப்பின் மேல் கணக்கிடப் பட்டுள்ளது.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

**இந்தியாவின் மிகப் பெரிய ம்யூச்சுவல் ஃபண்ட்**

13, சர் விட்டல்தாஸ் டாக்கர்சே மார்க், நியூ மெரீன் லைன்ஸ், மும்பை 400 020.
தொ.பேசி: 2031818. வருகை தளம் www.unittrustofindia.com

**அமைப்பு:** யூடிஐ சட்டம் 1963ன் ஷரத்துக்களின் கீழ் யூ.டி.ஐ. நிறுவனம் இயங்குகிறது. **பாதிப்பு நிலைமைகள்:** ம்யூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் எல்லா முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவையாகும். NAV ஏற்றத் தாழ்வுகள் ஷேர் மார்க்கெட்டில் நிலவும் காரணங்களுக்கேற்ப மேலேயோ கீழேயோ போகலாம். கடந்த கால சாதனை வருங்கால திட்டத்திற்கான உத்தரவாதம் அல்ல. யூஎஸ் 64 என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர திட்டத்தின் தரத்தையோ, வருங்கால வளர்ச்சி அல்லது லாபங்களையோ குறிப்பிடவில்லை. திட்டத்தின் குறிக்கோள்களை அடையும் உத்தரவாதத்தையும் அளிக்கவில்லை. முதலீடு செய்வதற்கு முன் முக்கிய விவரணைப் பத்திரத்தை கவனமாகப் படிக்கவும்.

**தென் மண்டல அலுவலகம்:** சென்னை தொ.பேசி: (044) 5210347. **கிளை அலுவலகங்கள்:** சென்னை தொ.பேசி: 5210356, 5230985. • கோயம்புத்தூர் தொ.பேசி: 214973. • மதுரை தொ.பேசி: 738186. • திருச்சி தொ.பேசி: 760060. **ஃபிரான்சைஸ் அலுவலகம்:** சேலம் தொ.பேசி: 416313. **சி.ஆர் கலெக்ஷன் மையங்கள்:** குன்னூர் தொ.பேசி: 31037. • கடலூர் தொ.பேசி: 21712. • தர்மபுரி தொ.பேசி: 61012. • திண்டுக்கல் தொ.பேசி: 432244. • ஈரோடு தொ.பேசி: 252494. • காஞ்சிபுரம் தொ.பேசி: 20076. • காரைக்குடி தொ.பேசி: 22277. • மயிலாடுதுறை தொ.பேசி: 26739. • நாகர்கோவில் தொ.பேசி: 40274. • பாண்டிச்சேரி தொ.பேசி: 339080. • ராஜபாளையம் தொ.பேசி: 21360. • தஞ்சாவூர் தொ.பேசி: 31374. • திருநெல்வேலி தொ.பேசி: 339567. • தூத்துக்குடி தொ.பேசி: 325621. **யூடிஐ பாங்க்:** அண்ணாநகர் தொ.பேசி: 6289045. • டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை தொ.பேசி: 8231085. • தி.நகர் தொ.பேசி: 8239134–35.

SAATCHI & SAATCHI - 11/2000 C B

பார்த்திபனுக்கும் பிரகாஷுக்கும் நாளை மத்தியானம் பள்ளி இருக்காது என்றதும் முதலில் தோன்றிய உணர்ச்சி மகிழ்ச்சி அல்ல. கேள்விதான். ஏதேது? நமது பள்ளியின் விடுமுறையை யார் வேண்டுமானாலும் தீர்மானிக்கலாமா? அந்த அளவுக்கா ஆகிப் போய் விட்டது. ஸ்டிரைக் மேலதிகம் நீர்த்துப் போய்விட்டது போலிருந்தது.

"எதுக்கு லீவு?"

"நாளைக்கு உங்க பி.ஈ.டி. மாஸ்டருக்கு ஃபேர்வெல்-பிரிவுபசாரவிழா."

ஒரு பொருட் பன்மொழியாக தங்கராஜ் ஃபேர்வெல் என்றும் பிரிவுபசார விழா என்றும் குறிப்பிட்டது டியூட்டராகச் செயல்படும் மேஜர் சுந்தர்ராஜனின் சினிமா பார்ப்பது போலிருந்தது. ஆக, வெற்றி வேந்தன் பி.ஈ.டியாக மாற்றலாகிவிட்டது.

அவர் புத்தகம் கொண்டு வந்து பாடம் நடத்துகிற பிரிவில் இல்லை என்பதாலேயே மாணவர்களுக்கு அவர்மீது வாத்சல்யம் இருந்தது.

அவர் மாற்றலாவது பற்றி பெரிய அளவில் இன்ப துன்பம் ஏதுமில்லையென்றாலும் அவரிடத்தை நிரப்ப புதிதாய் வருகிறவர் எப்படியிருப்பார் என்ற ஆர்வம் மேலிட்டது. புதிய ஆசிரியர் தனக்கு நண்பர் என்று தங்கராஜ் சொன்னான்.

தங்கராஜிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பும்போது இருவருக்கும் 'இந்த ஆள் யாரு?' என்று கேள்வியிருந்தது. தென்னிலையிலிருந்து படிக்க வருபவர்களிடம் விசாரிக்க வேண்டும் என நினைத்தனர்.

மறுநாள்...

தங்கராஜைப் பற்றிய தகவல்கள் மிகச் சுவாரசியமாகவே இருந்தன. தாக்குப் பிடிக்க முடியாத தத்துவங்களை உள்ளடக்கி தனது வாழ்வை வாழ்ந்து கொண்டிருந்தான். அதில் இரண்டே நிலைகள்தான். ஒன்று சக்கரவர்த்தி அல்லது வெறுங்கை. அவனது கையில் காசு உள்ளபோது ஏழெட்டு கடைகளில் அக்கவுண்ட்டுக்கான சிகரெட் அட்டைகள் திறந்து விடும். அப்போது எந்நேரமும் 1.5லிட்டர் பெப்சி பாட்டில் சகிதம் அவன் உலா போவது நடக்கும். உள்ள காசுகள் வாரி இறைந்தபின் அறைக்குள் கிடப்பான். தனது



ஹெட் ஆஃபிஸாக தென்னிலையில் அறை ஒன்றும் பிடித்து வைத்திருந்தான். ஒவ்வொரு நாள் மாலையிலும் ஒரு மணி நேரத்தை மட்டும் புயலைப் போன்ற விரைவுடன் செதுக்கி வைத்திருந்தான்.

நாலு மணிக்கு தனது 'அட்லஸ்' சைக்கிளில் தென்னிலையில் புறப்பட்டு சின்னதாராபுரம் மலச்சியூர் முக்குக்கு வந்து விடுவான். வடக்கே செல்லும் பள்ளிப் பிள்ளைகள் பஸ் ஏறுகிற இடம் அது.

ஈரோடு டிரான்ஸ்போர்ட் என்றெழுதப் பட்ட ஈட்டி வண்டி என்றறியப்பட்ட பேருந்து 4.45க்கு அங்கே வரும். அதைக் காத்து உணர்வு முனைகள் கூர்மைப்பட பெஞ்ச்சில் அமர்ந்து புகைத்திருப்பான் டீக் கடையில்.

தென்னிலை, பரமத்தி போகவுள்ள பெண்கள் பேருந்தில் ஏறியதும் அட்லஸ் சைக்கிளில் துரத்துவான். பேருந்து கூடலூர், சென்னிமலைப் பாளையம் இரு இடங்களில் நிற்கிற குறு இடைவெளியைப் பயன்படுத்தி பேருந்தை முந்திச் சென்று தென்னிலையில் மாணவிகள் பஸ் இறங்கக் காத்திருப்பான்.

வழியனுப்பவும் வரவேற்கவும் ஒரே ஆளாய்க் காணும் பெண்கள் பாக்கியவதிகள்.

அஜய் ஜடேஜாவுக்கு விளம்பரத்துக்கு கிடைத்த மலையேறும் சைக்கிள் கிடைத்தால் தங்கராஜ் உலக மிதிவண்டிச் சாம்பியனாகி விடுவான். என்ன ஒன்று... அவனது சைக்கிள் பாதையில் முன்னால் ஒரு நீலநிற பஸ் போக வேண்டும். அன்றைக்கிருக்கிறது இந்தி யாவுக்கு ஒலிம்பிக்கில் ஒரு தங்கம்.

கேள்விப்பட்ட புதிர்ச் செய்திகளைக் கொண்டு பார்த்திபனுக்குத் தங்கராஜ் மீது அன்பு அதிகரித்தது. பிரிவுபசார விழா ஒரு பொது நிகழ்ச்சி போல நடக்குமாகையில் சாயந்திரம் அவனது வரவை எதிர்பார்த் தான்.

**ம**திய உணவுக்கு முந்திய பாடப்பிரிவு வேளையில் சர்க்குலர் வந்தது. நம் பள்ளியில் ஏழாண்டுகள் பணியாற்றிய திரு. வெற்றி வேந்தன் அவர்கள் திருநெல்வேலி மாவட்டம் விக்கிரமசிங்கபுரத்துக்கு மாற்றலாகிச் செல்ல இருக்கிறார். அவருக்குப் பிரிவுபசார விழா மாலை மூணு முப்பதுக்கு நடக்கிறது. அனை வரும் கலந்து கொள்ளவும்.

ஆசிரியர்களை வழியனுப்புவதில் மாண வர்களுக்கு விருப்பமிருப்பதில்லை. எஸ்.கே.சி. சிஸ்டத்தை மாணவர்களுக்கும் விரிவு செய் தால் ஆர்வம் காட்டுவார்களாயிருக்கும் எஸ்.கே.சி. ஆசிரியர்களுக்கு மட்டும்தான். எஸ்.கே.சி. என்பது கேட்பதற்கு ஆசிரியர் பெயர் போலத் தோன்றினாலும் அது அப் படி அல்ல. ஸ்வீட், காரம், காப்பி என்பதன் சுருக்கமாக அப்படி வழங்கப்படுகிறது. பள்ளி யின் பாரம்பரியத்தில் பன்னெடும் காலமாக 'நேரு பலகாரக் கடை'யிலே இருந்தே

## க.சீ.சிவகுமார்



எஸ்.கே.சி. தருவிக்கப்படுகிறது. ஜிலேபி, மிச்சர், காப்பி என்ற ஐட்டங்களே பிரிவுப் பிரசாதமாகப் பயின்று வந்தது. மாறாத சுவை யும் தரமுமுள்ள இந்த வகையினங்கள் புவியியல் ஆசிரியர், ஓவிய ஆசிரியர், காவிய ஆசிரியர், தமிழாசிரியர், தலைமை ஆசிரியர் என யாராயிருந்தாலும் சமதர்மமாகவே நிலவி வந்தன. பன்னிரண்டு-சி கட்டடத்தில் தான் இனிப்பும் காரமுமான கடைசி விருந்து கள் நடந்து கொண்டிருந்தன.

வெற்றி வேந்தன் உடற்றிற (உடல்+திற) ஆசிரியராய் வந்தபின் மாணவர்கள் விழுப்புண்கள் இல்லாது விளை யாட ஏற்பாடு செய்தார். அவர் வந்ததும் நிறைய

"இன்னிக் குத்தான் சம்பளம் வாங்கியிருக்கீங்க; அதுக் குள்ள கடன் கேட்கறீங்க?"

"இருபதாம் தேதிக்கு மேலே கேட்டா பணமே இல்லேன்னு சொல்லுவீங்க இல்லே...!"

– மதுரை 'ஷரோ'



த்ரோ பால்களையும், டென்னிகாய்ட் என்ற ழைக்கப்பட்ட மோதிரப் பந்துகளையும் வாங்கிப் போட்டார்.

மாணவர்களின் பெருவிருப்பமோ கிரிக் கெட்டின்பால் இருந்தது. இவ்விருப்பம் இடையறாது சுடர்விட விளம்பரங்கள், தொலைகாட்சிப் பெட்டிகள், சூதர்கள் அரசு ஆகியன உதவி வந்தன.

கிரிக்கெட் ஃப்ளேனல்கள் வாங்கிப் போடும்படி வலியுறுத்தியபோது வெற்றி வேந்தன் பேஸ்பால் பேட்டும் பந்துகளும் வாங்கிப் போட்டார். உலக்கையை நினைவு படுத்தும்படி அந்த மட்டை இருந்தது. அதற்கு சாபல்யம் அளிக்க உள்ளே 'மஞ்சி' வைத்த பந்துகள் இரண்டு. நான்கு அடி வாங்கியதும் அவை வால்பேரியின் வடிவத்தை எய்தின.

வட்டார, மண்டல அளவிலான உடற்றி றப் போட்டிகளில் பேஸ்பால், ரிங்பால், த்ரோபால் போட்டிகள் நடைபெறவில்லை யாதலால் பள்ளி 'சாம்பியன்' ஆகும் வாய்ப்பை இழந்து வந்தது. மாணவர்களுக்கு பள்ளி அளவிலான வின்னர், ரன்னர் சான்றிதழ்களே எஞ்சின.

சேர, சோழ, பாண்டிய, பல்லவ அணிகள் சொந்தக் கொல்லையில் காய்த்த வாகை யையே சூட வேண்டி இருந்தது.

ஸ்போர்ட்ஸ் தினத்தன்று மட்டும் உயிர் பெறுபவையாக குண்டு, தட்டு, ஈட்டி ஆகியனவும் இருந்தன. இவை உடற்றமிழில் முறையே ஷாட்புட், டிஸ்க், ஜாவ்லின் என அழைக்கப்பட்டன. ஜாவ்லின் மட்டும் உச்சரிப்பதற்கு ஆங்கிலேய டென்னிஸ் வீராங் கனையின் பெயர் போல இருக்கிறது. மாண வர்களுக்கு வாலிபால் மீதும், ஃபுட்பால் மீதும் ஆவேசம் தோனும்போது நிவாரணியாக த்ரோபால்கள் உதவி உலவி வந்தன.

இத்தகைய நிலையில்தான் வருடம் தவறாமல் இலக்கிய மன்ற நிறைவு விழாவுக்கு மறுதினம் 'ஆன்யுவல் ஸ்போர்ட்ஸ் டே' கொண்டாடப்பட்டது. இதைத் 'ஆண்டிறுதி உடற்றிறப் போட்டி' என தமிழ் நோட்டீஸ் அறிவித்தது. இதன் தொடர்ந்த வல்லின உச்சரிப்பு பற்களின் உறுதிக்குப் பலமான பயிற்சி.

ட்வெல்த்-சி-யில் எஸ்.கே.சி. முடிந்தபின் அதற்கு முன்னுள்ள மைதான வெளியில் கூட்டம் துவங்கியது. பெஞ்சுகளாலான எளிய மேடையில் சில ஆசிரியர்கள். அதற்கு எதிராக மாணவர்கள்-தரையில் அமர்ந்திருந் தனர்.

இயற்பியல் ஆசிரியர் கண்ணபிரான் ஒலி பெருக்கியை அமைத்துவிட்டார். ஒலிக்கட் டுப்பாடு அவரது பொறுப்பில் இருந்தது.

மாணவர்களும் மாணவிகளும் இரு புறத்தை பட்டாங்கில் உள்ளபடி பகிர்ந்து கொண்டார்கள். இடையில் மிகப்பெரிய மூடுதிரை அமைக்கும் எண்ணம் எதுவும் இதுகாறும் கே.என்.னுக்கு தோன்றவில்லை. ஆண், பெண் இருபால் பிரிவைப் பிரிக்கும் அகலப் பாதைக் கோட்டில் சில பெஞ்சுகள் இடப்பட்டிருந்தன. அதில் பார்வையாளர்கள். பள்ளிக்குப் புறத்திருந்து வந்தவர்கள்.

பெஞ்சைக் கடந்த பார்வைகளில் சில கோணங்களில் பார்த்திபனுக்கு அனிதா தட்டுப்பட்டாள். மீட்டிங் முடியும் வரை பார்த்துக் கொண்டே இருக்க வேண்டுமென விருப்பத்திட்டம். தங்கராஜும் அவனோடு இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க இளைஞ னொருவனும் பெஞ்ச் ஒன்றில் வந்தமர்ந்

தனர். அந்த பெஞ்சின் முன்னுள்ள பரப்பில் தான் பார்த்திபன் பார்வை ரேகையை நீட்டி விட்டிருந்தான். அந்த ரேகை நேசத்தின் நெய் மணந்து மத்தாப்பு போல பொறிச் சுடர்களை உமிழ்ந்து கொண்டிருந்தது. பெஞ்சிலிருந்த வாறு தங்கராஜ் பார்த்திபனைப் பார்த்துப் புன்னகைத்தான். ஒலி பெருக்கியில் தமிழய்யாவின் குரல் கவிதை கேட்டுக் கொண்டிருந்தது.

"ஆய கலைகள் யாவும் கற்றுத்
தருகிற பள்ளியிலே
நேரமுடன் உடல் திறத்தைக்
கற்பித்த உபாத்தியாயன்
தூய உள வெற்றிவேந்தன்...

தமிழய்யாவுக்குப் பிறகு ஹெர்.எம். பேச வந்தார். அவருக்கும் உடற்கல்வி ஆசான் குறித்துப் பேசுவதற்கு செய்திகள் இருந்தன.

"அன்பு சால் மாணவ மாணவிகளே! நமது உடற்கல்வி ஆசிரியர் பற்றி நீங்களெல்லாம் அறியாத புதிய செய்தி ஒன்றை உங்களுக்குச் சொல்லப்போகிறேன். அன்னார் அவர்கள் இதற்கு முன் பகபதிபாளையம் உயர் நிலைப் பள்ளியில் பணியாற்றிய போது அவரிடம் பயிற்சி பெற்றவர் தான் கந்தசாமி அண்ணாவி." கந்த சாமி அண்ணாவி யாரெனத் தெரி யாது மாணவர்கள் திகைத்திருக்கையில் அறிவிப்பாளரின் குரலில், "அவர்தான், நமது தேசிய உயரந்தாண்டுதல் சாம்பியன்."

கரவொலி கூரை தாழ்வாரம் முதலிய வற்றைப் பிளந்து விட்டது. வெற்றிவேந்தன் ஒரு தேசிய சாம்பியனை உருவாக்கியது வியப்பான சங்கதியே. அண்ணாவி 2.14 மீட்டர் தாண்டி விட்டார். வெற்றிவேந்தன் 172 செ.மீ. உயரம்தான். அவரைவிடவும் அதிக உயரம் தாண்டிவிட்டான். தன்னிச்சையாக எழுந்து பிரகாசித்து விட்டான். ஆனால் ஏன் அவனுக்கு அவர் 'த்ரோபால்' கற்றுத் தர வில்லை.

"அவரது பயிற்சி பெற்ற நம் பள்ளியில் சிறப்பான வீரர்கள் உலகில் அவரது புகழை வருங்காலத்தில் நிலை நாட்டுவார்கள் என நம்புகிறேன். செல்லுகிற இடத்திலும் அவரது சாதனைகள் தொடரவேண்டும்."

விக்கிரமசிங்கபுரம் ஸ்கூலில் த்ரோபால் இருக்கிறதா தெரியவில்லை.

பெஞ்சில் தங்கராஜுக்கு அருகில் அமர்ந் திருந்தவன் காலை சற்றே முன்னால் நீட்டி மடித்ததில் பார்த்திபனுக்கு பார்வைக் கோணம் தடைப்பட்டது. பார்வைக் குவி மையம் ஒரு கறுப்பு பேண்ட் டாக இருப்பதை பார்த்திபன் விரும்ப வில்லை.

"ஹலோ... உஸ்" கறுப்பு பேண்ட்காரன் பார்த்திபனைப் பார்க்கவும் காலைக் குறுக்கி வைங்க... மறைக்குது... பாக்கணும்' என்பதை சைகைகளினால் தெரிவித்தான். அவன் புன்னகையோடு முழங்காலுக்குக் கீழே உட் சரித்துக் கொண்டான்.

தலைமை ஆசிரியர், "மாணவர்களே! இதே கூட்டத்திற்கு நமது வருங்கால உடற் கல்வி ஆசிரியர் அவர்களும் வந்திருக்கிறார் கள். அவரை அறிமுகப்படுத்த வேண்டியது எனது கடமை. ஆகவே அவரை மேடைக்கு அழைக்கிறேன்."

இப்போது கறுப்பு ஃபேண்ட் அணிந்த இளைஞன் பெஞ்சிலிருந்து எழுந்து மேடைக்குச் சென்றார். போகிறபோது பார்த்திபனை இலேசாய்ப் புன்னகையோடு பார்த்தார். அந்தப் புன்னகை புத்தருக்கும், மோனலிஸாவுக்கும் இடைப்பட்டதாய் இருந்தது.

(தொடரும்)

## கபீர்தாசர் சிரித்தது ஏன்?



கபீர்தாசர் இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டவர். அவரை இந்துக்களும் திட்டினார்கள். முஸ்லிம்களும் திட்டினார்கள். கபீர்தாசர் சிரித்தார்.

இந்துக்களும் முஸ்லிம்களும், "என்னையா! நாங்கள் திட்டுகின்றோம். நீங்கள் சிரிக்கின்றீர்களே. ஏன்?" என்று கேட்டார்கள்.

அவர், "என்னைத் திட்டுவதிலாவது நீங்கள் 'ஒற்றுமையாக இருக்கிறீர்களே என்ற மகிழ்ச்சியில்தான்!" என்றார்.

– எல். கோபால கிருஷ்ணன்



# தாவணி

ராசீ தங்கதுரை

"இன்னைக்கு என்ன நான்னு உனக்குத் தெரியுமா?" கடற்கரைக்காற்று உடலைச் சுகப்படுத்த, வதனாவிடம், மாதவன் கேட்டான். "நாம ரெண்டு பேரும் 'டைட்டானிக்' பார்த்த நாள்."

"இல்ல..." "எனக்குத் தெரியலப்பா... ஆளவிடு..."

"தோல்விய ஒப்புக்க. விடையை நான் சொல்றேன்."

"தோத்துட்டேன். நீயே சொல்லு" "அப்படி வா வழிக்கு. வீட்ல போயி டைரியில குறிச்சு வச்சிக்க. இன்னைக்குத்தான், 'பாட்டி வடை சுட்ட கதை' சாரி 'காவியம்' உருவான நாள்."

"கவுத்திட்டியே பாவி. இப்படியெல்லாம் நடக்கும்னுதான் நான் இந்த விளையாட்டுக்கே வரலைன்னேன். ச்சே... உன் தலையில எம்.எல்.ஏ. பதவி விழுந்து சட்டசபையில அடிபட்டு ஆஸ்பத்திரி போக" சாபம் விட்டாள்.

"நீ தோத்துட்ட. ஸோ, நான் சொல்றத நீ கேக்கணும்..." "கேக்கிறேன். சொல்லித் தொலை..."

"எனக்காக இன்னைக்குத் தாவணி போட்டுக்கணும்" – ஆசையாய்ச் சொன்னான்.

"ஆரம்பிச்சுட்டியா... என் கிறல் விழுந்த ரிக்கார்டே..." "நடந்த போட்டியில தோத்திருக்க, எதுவும் பேசாம பைக்ல என் பின்னால வந்து உட்கார்ற. கடைக்குப் போறோம். தாவணி வாங்குறோம். நீ கட்டிக்கிற. நான் பிறவிப் பயனை அடையிறேன்" எழுந்துகொண்டான்.



வெளிர் நீலத்தில் தாவணி செட் ஸெலக்ட் செய்தான். வெடுக்கென வாங்கி ட்ரெஸ்ஸிங் ரூம் சென்றான். கச்சிதமாக உடுத்திக்கொண்டு வெளியில் வந்தான். அவள் அருகில் சென்ற மாதவன், "வெளிர் நீல ஆடையிலதான் தேவதைகள் இருக்கும்னு இப்பத்தான் புரியுது" என்றான்.

"இந்த ட்ரெஸ்ஸோட வீட்டுக்குப் போயி நான் என்ன பதில் சொல்றது?" அவளுள் இருந்த பயம் வெளிப்பட்டது. "சுசிக்கு இன்னைக்குத்தான் பிறந்த நாள்னு சொன்ன? அவதான், அவளுக்கும், எனக்கும் ஒரே மாதிரி கலர்ல ட்ரெஸ் எடுத்தே ஆகணும்னு இந்தத் தாவணிய எடுத்துத் தந்தாள்னு சொல்லு."

"உன்னை லவ் பண்ற கொடுமைக்கு இந்தப் பொய்யவும் சொல்லி சமாளிக்கிறேன்."

மனசு முழுவதும் மகிழ்ச்சி நிரம்பிய மாதவன், வீட்டிற்குள் நுழைந்தான். அவன் தங்கை எதிர்ப்பட்டாள்.

"யார்ரா இது. என் தங்கச்சிதானா? அடையாளமே தெரியலையே... சுடிதார் உனக்கு நல்லாயிருக்கு. ஆமா இதை யார் வாங்கித் தந்தாங்க..." எப்பவும் போல் கேட்டான்.

"அவளோட தோழிக்குப் பிறந்தநாளாம். இரண்டு பேரும் ஒரே கலர்ல போட்டுக்கலாம்னு... இவ வேணாம் வேணாம்ங்க பிடிவாதமா எடுத்துக் குடுத்தாங்களாம்."

மாதவனுக்குச் சற்று முன் வதனா, மனத்தில் நிரப்பிக் கொடுத்திருந்த உற்சாகம், வடிந்து போனது.



# வாழும்போதே வாழ்த்துவோம்!

**வை**ரமுத்து இதுவரை எழுதிய கவிதைகளின் தொள்ளாயிரம் பக்கத் தொகுப்பொன்று கடந்த பன்னிரண்டாம் தேதி சென்னை காமராஜர் அரங்கத்தில் வெளியிடப் பட்டது.

கலைஞர் தலைமையேற்று வெளியிட வந்திருந்ததாலும் கூடுதலாக 'ஆழ்வார்ப்பேட்டை ஆண்டவர்' கமல், (கூட்டத்தில் ஒரு ரசிகர் உணர்ச்சி வசப்பட்டுக் கூவி அளித்த புதுப் பட்டம்!) வாழ்த்துரைக்க வந்திருந்த தாலும் அரங்கத்துக் கொசுக்களுக்குப் பறக்க இடமில்லை. இந்தத் தொகுப்பைத் தன் சொந்த 'மகன்' என்றே வைரமுத்து வருணித்தார். விழா நடந்ததென்னவோ வளர்ப்பு மகன் திருமணம் போல!

பாரதி, பாரதிதாசன், கண்ணதாசன் வரிசையில் வரும் வைரமுத்து, அவர்கள் சாதிக்காததையெல்லாம் எப்படிச் சாதித்தார் என்று விஸ்தாரமாக விளக்கினார்கள் பேச்சாளர்கள்.

இந்தப் படாடோபமெல்லாம் எதற்கு என்பது பற்றிப் பேசிய வைரமுத்து,

"தமிழ்நாட்டில் எந்தக் கவிஞனையும் யாரும் வாழும்போதே வாழ்த்தியதில்லை. 'அந்த மரபை உடைக்கவே இந்த விழா; இது வைரமுத்துவுக்கு நடக்கிற விழா அல்ல. ஒட்டுமொத்த கவிஞர் சமூகத்துக்கான பாராட்டு விழா'' என்று சொன்னார்.

மிக நல்ல நோக்கம். வைரமுத்துவுடன் சக கவிஞர்கள் சிலர் விழா மேடையில் ஏற்றப்பட்டிருந்தால் அது முழுமை பெற்றிருக்கும்.

மரபின்மைந்தன் முத்தையா என்றொரு கவிஞரை மேடையில் வைத்திருக்கிறார்களே என்று பார்த்தால், அவர் கவிப்பேரரசு வைரமுத்து சமூக இலக்கியப் பேரவையின் மாநில ஒருங்கிணைப்பாளர்.

ஒரு தேர்ந்த புள்ளியியல் துறை வல்லுநர் போல அவர் கவிஞரின் பாடுபொருட்கள் எவையெவை, ஒவ்வொன்றின் மீதும் எத்தனை பாடல்கள் என்கிற பட்டியல் தந்து விட்டுப் போனார்.

'ஆழ்வார்ப்பேட்டை ஆண்டவர்'க்குக் கவிஞரைப் பற்றிப் பேசுவதா, கலைஞரைப் பற்றிப் பேசுவதா என்கிற குழப்பம் கடைசி வரை. கலைஞர் மட்டுமே கவிஞரைப் பற்றி மட்டும் பேசினார்.

வைரமுத்துவின் கவிதைகளை அலசி ஆராய்வதில் ஆரம்பித்த அறவாணன் விரைவிலேயே முகஸ்துதி நடத்துக்கு மாறிவிட்டார்.

**வை**ரமுத்துவின் இந்த நூல் அசோகமித்திரன், இ.பா., சுஜாதா, அவ்வை நடராஜன், க.ப. அறவாணன் என்று அகன்ற வாசிப்பு உடையவர்களால் தொகுக்கப்பட்டது. பார்த்தவுடன் சிநேகம் கொள்ளச் செய்யும் விதமான ரவிசங்கரனின் போட்டோக் கவிதைகள் பக்கத்துக்குப் பக்கம்.

அற்புதமான பல கவிதைகள் அடங்கிய இத் தொகுப்புக்கு நியாயம் செய்யும் இலக்கிய விழாவாக அந்த வெளியீட்டு விழா அமையாமல் போனது துரதிர்ஷ்டமே! அப்படியொரு இலக்கிய விழாவுக்குரியவர் வைரமுத்து.

— **விசித்திரக்குள்ளன்**

படம், நன்றி: **தினமலர்**

**கா**லச் சக்கரம் சிறுத்தைப் பாய்ச்சலாய் சுவாதியை உச்சத்துக்கு ஏற்றி விட்டது. சின்ரெல்லா போல உணர்ந்தாள். ஏதோ புதிய மாய உலகத்துக்குள் நுழைந்திருக்கிறோம்!

'இதோ விழித்துக் கொள்ளப் போகிறேன். அதிக மணலும் குறைந்த சிமெண்டு மாகக் கட்டப்பட்ட இந்த மாளிகை இடிந்து விழப் போகிறது – விழிப்பு என்ற கழுகின் கூரிய அலகு பட்டு' என்று தனக்குள் பலமுறை கூறிக் கொண் டாள்.



'இல்லை. இது உண்மைதான், கனவல்ல' என்று நெஞ்சை நிமிர்த்திச் சொன்னது காலம்.

ஓர் இளம்பெண் பெரும் விமான விபத் தைத் தடுத்தது உலகின் மொத்த கவனத் தையும் ஈர்க்க, அமெரிக்கா உடனடியாக அந்தக் காரியத்தைச் செய்தது.

"நாஸாவிலிருந்து செலுத்தப்படவிருக்கும் எங்கள் அடுத்த விண்கலத்தில் நீங்களும் இடம்பெறலாம். துணிவுமிக்க ஓர் இளைய தலைமுறைப் பிரதிநிதியை இந்த சாகசத்தில் பங்கேற்கச் செய்ய எங்கள் அரசு சில விதிவிலக்குகளை உங்கள் விஷயத்தில் அளிக்கத் தயாராக இருக்கிறது'' என்று சுவாதிக்கு அழைப்பு விடுத்தது.

விண்வெளி மையத்தில் பெற்ற கடுமை யான பயிற்சிகள், அவற்றில் தேர்வு பெற்றது என்று தொடங்கி இன்று ஜனாதிபதியின் கைகுலுக்கலைத் தொடர்ந்து விண்வெளிக் கலத்தில் ஏறியும் விட்டாள்.

அம்மாவின் 'விண்வெளிப் பயணம்' மனத்தில் வலம் வந்தது. ரிஷிகேஷிலிருந்து சென்னைக்கு வந்து கொண்டிருந்தபோது நாக்பூர் ஸ்டேஷனில் சத்யா அவளது பள்ளித் தோழி ஒருத்தியை சந்தித்திருக்கிறாள். "ஒரே ஒரு நாளாவது நீ என்னோடு தங்கி விட்டுத் தான் போக வேண்டும்'' என்ற அவளது வேண்டுகோளைத் தட்ட முடியாமல், "சரி, ஒருநாள் மட்டும்'' என்று அவள் வீட்டுக்குச் சென்றிருக்கிறாள்.

தன் தோழி மிகவும் பலவீனமாக இருப்பதை உணர்ந்து விவரம் கேட்க, அவளது சிறுநீரகங்கள் பழுதடைந்த நிலை யில் இருப்பதையும், டயாலசிஸ் சிகிச்சைக் காகக் கிட்டத்தட்ட தனது மொத்த சேமிப் பையும் அவள் தொலைத்துவிட்ட அவலத் தையும் கேள்விப்பட்டு, தனது சிறுநீரகங்களில் ஒன்றை அளிக்க சத்யா முன்வந்திருக்கிறாள். பரிசோதனையில் இந்த உறுப்பு மாற்றம் ஒத்துப் போகும் என்று தெரியவந்தது.

தோழியைப் பொறுத்தவரை சிறுநீரக மாற்று வெற்றிகரமாக முடிந்து விட்டது. புதிய சிறுநீரகத்தை அவளது உடல் ஏற்றுக் கொண்டு விட்டது. ஆனால் சத்யாவின் உடலில்தான் திடீர் பாதிப்பு. ஏதோ வைரஸ் கிருமிகள் அவளைத் தாக்க, அறுவை சிகிச்சைக்குப் பிறகு மிக பலவீனமாக இருந்த அவளது உடல்நிலை வெகு சிக்க லடைந்தது. பல நாட்கள் நினைவிழந்த நிலையில் இருந்தாள்.

ஒருநாள் லேசாக நினைவு திரும்பியபோது நிலைமையை யூகித்துக் கொண்டிருக்கிறாள். நல்லவேளையாக ராஜ்குமார் கொடுத்திருந்த விள்ம்பரம் வேறு அவள் கண்களில் பட்டுவிட, உடனே தன்னை சென்னைக்கு அனுப்பியாக

26

வேண்டுமென்று தோழியையும், டாக்டரையும் வற்புறுத்தினாள்.

சென்னை வந்து சேர்ந்தபோது அவளது உடல்நிலை மிக மோசமடைந்தது. சுவாதியைப் பற்றிச் சொல்ல ராஜ்குமாரும், கோமளாவும் துடித்துக் கொண்டிருந்தபோது சத்யா கண் திறந்தாள். தான் இறந்து விட்டால் தனது உடல் உறுப்புகளை தேவைப்படுகிறவர்களுக்குத் தானமாக அளிக்க வேண்டும் என்று குறிப்பிட்டு, அதற்கான கடிதத்தை எழுதச் சொல்லிக் கையெழுத்தும் போட்டாள்.

"உன் மகள் சுவாதி உன்னோடு வாழ்வதற்காக சென்னைக்கு வந்திருக்கிறாள் சத்யா. இப்போ பெங்களூருக்குப் போயிருக்கா. அவ பைலட்டாகி விட்டாள் தெரியுமா?" என்று கோமளா சொன்னவுடன் சத்யாவின் கண்களில் வர்ணிக்கவே முடியாத ஒரு ஒளி பிறந்தது. எதிரில் சுவாதி இருப்பதாகவே பாவித்து அவளை ஆசீர்வதிக்கும் விதமாகக் கையைத் தூக்கினாள். அடுத்த ஒரு மணி நேரத்திலேயே அவள் உயிர் பிரிந்து விட்டது.

இதையெல்லாம் கூறிவிட்டு, "பிறருக்கு உதவுவதற்கென்றே பிறவி எடுத்திருக்காள்ங்கிறதை கடைசி வரை நிரூபிச்சுட்டுப் போயிட்டா சத்யா" என்று ராஜ்குமார் கதறினார்.

**அருண் சரண்யா**

தெரிந்தவர்களெல்லாருமே வழியனுப்ப விமான நிலையத்துக்கு வந்திருந்தனர்.

"என்னுடைய இன்னொரு மகளும் இப்போ அமெரிக்காவுக்குப் போகப் போறா" என்று பெருமையுடன் அவளது கைகளைக் குலுக்கினாள் கேப்டன் விஷ்ணுராமின் மனைவி. அம்மாவின் இதயம் இப்போது இவள் உடலில் இயங்குகிறது கலக்கத்தை மறைத்தபடி.

"ஆனால் நான் சீக்கிரமே இந்தியாவுக்குத் திரும்பி வந்துடுவேன்மா" என்றாள் சுவாதி.

"பின்னே, எங்களுக்கும் கடைசிக் காலத்தில் எங்கள் மகளோடு இருக்கணும்கிற ஆசை இருக்காதா?" என்ற விஷ்ணுராம், "கடைசியில் என் உள்ளுணர்வு பலிச்சுடுச்சு பார்த்தியா சுவாதி? நீ விமானப் பயிற்சி எடுத்துக்கிட்டப்பவே உன்னை பாஸ்போர்ட்டுக்கு அப்ளை செய்யச் சொல்லி வாங்க வைத்தேனே. எனக்குத் தெரியும், நீ பெரும் சாதனைகள் படைக்கப் போகிறாய் என்று" என்றார்.

முன்னாவும் வந்திருந்தான். பாசமான குடும்பச் சூழல் இருந்தால் அவன் மேலும்



விரைவாக சகஜநிலைக்குத் திரும்ப வாய்ப்பு உண்டு என்று மருத்துவர்கள் கருத்துத் தெரிவித்திருந்தனர். 'தான் திரும்பி வந்தவுடன் இவனைத் தன்னுடன் அழைத்துக் கொள்ள வேண்டும்.'

"அக்கா, கவலைப்படாதே. அமெரிக்கா போயிட்டு வந்தவுடனே நான் உங்களைப் பார்த்துக்கறேன்" என்று அவன் கூறியது நெகிழ்ச்சியை ஏற்படுத்தியது. தொடக்கக் காலத்திலிருந்து அவளோடு இருக்கும் ஒரே ஆத்மா. கண்ணீர் வழிய விடைபெற்றுக் கொண்டாள்.

"வர வர என் மாமியார் தேர்தல் கமிஷன் போல நடந்துக்கறா."

"என்ன செய்யறா?"

"இரவு பத்து மணிக்குமேல் கணவருடன் பேசிக் கொண்டிருக்கக் கூடாதுன்னு உத்தரவு போடறா!"

— லலிதா செல்லப்பா



"மலங்க மலங்க முழிச்சுக்கிட்டே நீ நேத்துதான் காசியிலேயிருந்து வந்த மாதிரி இருக்கு. இப்ப என்னடான்னா..." கோமளா ஆன்ட்டியின் வியப்பு இன்னும் தீர்ந்த பாடில்லை.

சங்கீதாவுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. சுவாதியை வழியனுப்பக் கூட வந்திருந்த புதிய, புரிந்து கொண்ட கணவன். பிரியமான சுவாதிக்குக் கிடைத்துள்ள அற்புத வாய்ப்பு. வேகமான கையசைவிலேயே அவள் உற்சாகம் வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

ராஜ்குமார் எதுவும் பேசாமல் - ஆனால் மௌனத்திலேயே பல சேதிகளைக் கூறி விடை கொடுத்தார்.

பிரசாத்தும் வரத் தவறவில்லை. "உன் முடிவுகள் எப்போதுமே சரியானதாகவே இருந்திருக்கு சுவாதி" என்றான் ஆத்மார்த்தமாக.

**கௌ**ண்ட்டௌன் தொடங்கியது.

20 - 19 - 18 - 17

அம்மா இறக்கவில்லை. தன் பல்வேறு உடல் உறுப்புகளைப் பலருக்களித்து புதுப் பிறவி(கள்) எடுத்திருக்கிறாள். வயது வித்தியாசம் இல்லாமல், உறவு நட்பு என்ற வட்டத்துக்குள் அடைபடாமல், ஏன் ஆண், பெண் என்ற வித்தியாசம் கூட இல்லாமல் இவ்வளவு புதிய பிறவிகளையும் ஒரே சமயத்தில் எடுத்திருக்கிறாள்.

16 - 15 - 14 - 13 - 12

டேராடூனில் குட்டுப்பட்டே வாழ்ந்த வாழ்க்கை. 'நிலத்தைப் பார்த்து நடப்பவள்தான் பெண்' என்ற அப்பா.

11 - 10 - 9 - 8

காசியில் அப்பா இறக்க, தனிமைப்படுத்தப்பட்ட நிலையில் சிறகுகளே இல்லாத உணர்வுடன் தான் சென்னைக்கு வந்தது.

7 - 6 - 5

'உனக்கா இல்லை சிறகுகள்? உணர்வதில் இருக்கிறது வெற்றியின் சூட்சுமம்" என்று கண்ணெதிரில் வராமல் கண்ணாமூச்சி காட்டியபடியே பலவிதங்களில் தனக்கு உரமிட்ட அம்மா.

4 - 3 - 2

இப்போது என் பார்வை பூமியின் மீது பட்டாலும் கூட என் கால்கள் விண்வெளியில் என்பது என்ன ஒரு விநோதமான நிலை!

1 - 0

விண்கலத்தை பூமியோடு பிணைத்திருந்த ராட்சத போல்ட்டுகள் வெடித்துச் சிதறின. பூமியின் நியதிக்கு எதிராக அந்த விண்கலம் மேலெழுந்தது.

அம்மாவின் உடலை, அதன் பாகங்கள் பொருத்தப்பட்ட நான்கு பேரின் மூலம் பூமியில் காண முடிந்தது போல, இப்போது பறந்து கொண்டிருக்கும் இந்த விண்வெளியில் அம்மாவின் ஆத்மாவையும் எப்படியாவது தரிசித்து விடுவோம் என்ற நம்பிக்கை உதயமானது.

சிறிது நேரம் கழித்து அவள் விண்வெளிக் கலத்தை விட்டு வெளியேறி 'ஸ்பேஸ்-வாக்' எனப்படும் விண்வெளி நடைபயணத்தை வெற்றிகரமாக முடித்து சாதனை புரிந்த சமயத்தில், அமைதியாக இருந்த அந்த விண்வெளிப் பகுதியில் திடீரென்று ஒரு குளிர்க்காற்று சுவாதியைத் தீண்டியது. காற்று கூடப் புகாது என்று கருதப்பட்ட அவளது உடைகளையும் மீறி அந்தத் தென்றல் சுவாதியை எட்டித் தாலாட்டியது. அம்மா!

(முற்றும்)

அன்னை
ஸ்ரீ சக்தி யோகாலயம்"
3/496, ரெங்காரெட்டி
கார்டன்



போன்: 4490246
நீலாங்கரை,
சென்னை – 41.

இதோ புத்தம் புதிய 'யோகா' ஏடு!

**யோகக்கலசம்**

(அன்னை ஸ்ரீ சக்தி யோகாலயத்தின் "காலாண்டு" இதழ்)

'சக்தி' வாசக அன்பர்களே, மாணவ மணிகளே, இளைஞர்களே! இதோ உங்கள் உடல் நலம் மற்றும் மனவளத்தை அதிகரிக்கவே எங்கள் 'யோக ஆலயம்' இந்த இதழைக் கொணர்கிறது. 2 இதழ்கள் வந்துவிட்டன.

மிகவும் புதிய சிந்தனைகள் 'யோகா' பற்றி, எளிய முறை தியானம் மற்றும் 'ப்ராணிக்' ஹீலிங்–(எளிய முறை நோய்த் தடுப்புப் பயிற்சிகள்) செய்வது எப்படி, குறைந்த 20 நிமிடமே (காலையில்) சில எளிய யோகாசனப் பயிற்சிகள், 'காயகல்பம்' செய்து உடம்பை நோயின்றி எப்படி 'சிக்'கென்று வைப்பது, தியானத்தில் ரிஷிகளையே சந்தித்து எப்படி, பிரச்னைகட்குத் தீர்வு காண்பது போன்ற கட்டுரைத் தொடர்கள், உடல் நலம், மூலிகை பற்றிய தொடர் யாவும் இந்த 'யோகக்கலசத்தில்' சுவையாகப் படித்துப் பயன்பெறுங்களேன்!

* தனிப்பிரதி விலை ரூ. 12/- (காலாண்டிதழ்)
* ஓர் ஆண்டு நன்கொடைச் சந்தா ரூ. 60/- மட்டுமே (எம் குருஜி. ஸ்ரீ பாபாஜி படம் உட்பட)
* ஆயுள் மொத்தமாய் ரூ.500/- செக் அனுப்பி உறுப்பினராகுங்கள். இதழ்களும், அருள்வாக்கும் புனித திவ்ய பிரசாதமும் இலவசம்.
* ரூ.1000 மட்டுமே 'டெபாசிட்' கட்டக் கூடிய ஏஜண்டுகள் உடனே விண்ணப்பிக்கவும்.

அனைவரும் மேற்படி யோகாலயத்தை தொடர்பு கொள்க.

| | |
|---|---|
| *கவியோகி வேதம், இதழின் ஆசிரியர் நிறுவனர், அன்னை சக்தி யோகாலயம்* | *கவிமாமணி இளையவன், இணை ஆசிரியர்* |

ஜய ஸ்ரீராம்

ஹனுமத் உபாசகர் ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா அவர்களின் அருளாசியுடன் நீங்கள் எதிர்பார்த்த கீழ்கண்ட இரு புனித யாத்திரைகளை அறிமுகப்படுத்துகிறோம்.

14.9.2000 முதல் 14 நாட்கள் கொண்ட **மஹாளய பிதுர்முக்தி** யாத்திரை சென்னையில் இருந்து 3 டயர் கோச் மூலம் கௌஹாத்தி, அலகாபாத், அயோத்யா, காசி, கயா சென்றுவர நபருக்கு ரூ. 6000/-

23.10.2000 முதல் – 23 நாட்கள் கொண்ட **தீபாவளி கங்கா ஸ்நானம்** காசி யாத்திரை ஸ்பெஷல் சென்னையிலிருந்து 3 டயர் கோச் மூலம் காசி, கயா, அலகாபாத், அயோத்யா, ஹரித்வார், டில்லி, குருவாயூர், கன்னியாகுமரி, மதுரை, ராமேஸ்வரம் சென்று வர நபருக்கு ரூ.9000/-

**குறிப்பு** 1. 60 நாட்கள் முன்னதாக டிக்கட் ரிசர்வ் செய்ய வேண்டியிருப்பதால் நபருக்கு ரூ. 2000 செலுத்தி முன் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

2. எங்கள் சார்ஜ்களில் ரயில், பஸ் சார்ஜ்கள், ஆகாரம், தங்கும் ரூம் வாடகை மற்றும் ஊர் சுற்றிப் பார்க்கும் செலவுகள் அடங்கும்.

3. தங்களுடைய புனித யாத்திரையை வீடியோவில் பதிவு செய்து தருகிறோம்.

மேலும் விவரங்களுக்கு திருமதி P. தீபா
**பிரியா யாத்ரா சர்வீசஸ்,**
ஆனந்த் அப்பார்ட்மெண்ட்ஸ் (இரயில்வே ஸ்டேஷன் எதிரில்)
பிளாட் நெ. B 2, ஊரப்பாக்கம் 603 202
**போன் நெ:** 915-68452 STD - 04114-68452
E-mail : pys52@mail city.com

# ஸ்ரீ கிருஷ்ணா மந்தரம்
# மனோ தத்துவ ஜோதிட நிலையம்

## இது ஒரு மனோ தத்துவத்தின் அடிப்படையிலான ஜோதிடக் கணிப்பாகும். இதற்கு ஜாதகமோ, கைரேகையோ பார்க்கத் தேவை இல்லை!

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்கள் பெரியோர்கள். உங்கள் மனோ நிலையை உங்கள் உடல் அமைப்பு சொல்லிவிடும். அதுவே உங்கள் எதிர்காலத்தையும் காட்டும் கண்ணாடியாகும். அமைதியான தோற்றம், புன்சிரிப்பும் அதற்குத் தக்க உடல் அமைப்புகளும் பார்த்த மாத்திரத்திலேயே எதையும் வெற்றி கொள்ளக் கூடியவர்கள் என்பதைத் துல்லியமாகக் காட்டும். ஆனால் அவர்களுக்கு அமையும் கணவனோ, மனைவியோ இவர்களின் வெற்றி வேகத்தைக் குறைக்கக் கூடிய தடையாக இருக்கக் கூடும். இதையும் பார்த்தவுடனேயே சொல்ல முடியும். ஆக்கப் பூர்வமான மேல் நடவடிக்கைகளையும் சொல்ல முடியும். இது விதியையே வெல்லக் கூடிய, பரிகாரங்களைக் கொண்ட ஒரு ஜோதிடக் கணிப்பாகும். உங்கள் தொழில், திருமணம், பகையை நட்பாக்குதல், பண வரவு போன்ற கேள்விகளுக்கும் பதில் பெறலாம்.

வேத சாத்திரத்தில் கூறப்பட்ட பல விஷயங்களை சுமார் 20 வருட காலமாக ஆராய்ச்சி செய்து, அதை அனுபவ ரீதியாக உணர்ந்து அதன் அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டதாகும்.

விதி என்பது நிர்ணயிக்கப்பட்டது இல்லை. அது மாற்றத் தகுந்தது. இல்லை எனில் மகாபாரதத்தில் கண்ணன் கீதாஉபதேசம் செய்து அர்ஜுனனுக்கு வெற்றிக்கான வழியைக் கூறி இருப்பாரா? சிந்தியுங்கள். எங்களை கடிதம் மூலமாகவோ, தொலைபேசி மூலமாகவோ தொடர்புக் கொண்டு எங்களை சந்திக்க நேரம் பெற்றுக் கொள்ளுங்கள்.

**எங்களின் முகவரி**
**திரு. கிருஷ்ண ஐயங்கார்**
**ப/கா.எம்.எஸ்.சந்தானம், நெ.112, வாசுதேவ நகர்,**
**அசோக் நகர் (காசி தியேட்டர் அருகில்) சென்னை - 600 083.**

**தொலைபேசி எண் :**
**அலுவலகம் : 4893806**
**வீடு : 913-56476**




# ருபத்திரண்டாம்

**கு**ட்டைக் குட்டையான தஞ்சாவூர்ப் பாணி உடம்பு. கறுப்பு என்று சொல்லத் தயங்குகிற நிறம். வாய்நிறையச் சிரிப்பு. நடுப் பல் ஒன்றில் ஓரமாக ஏதோ ஒட்ட வைத்த மாதிரி மின்னுகிற தங்க நிறம். அதுவே ஒரு கூடுதலான அழகு.

காலையில் நான் போகிற நேரங்களில் எல்லாம், மனைவிக்கு உதவியாகக் கீரையையோ, முட்டைக் கோஸையோ, அரிவாள்மணையைக் காலில் இடுக்கிக் கொண்டு சரசரவென்று நறுக்கிக் கொண்டிருப்பார்.

# பக்கத்து மூளை

கூடவே, இடப்புறம் விரித்துக் கிடக்கும் நாளிதழில் பார்வை பதிந்திருக்கும்.

சர்க்கார் உத்தியோகத்தில் சபிக்கப் பட்ட ஜன்மங்களுள் அவரும் ஒருவர். சின்னக் குழந்தைகள் படிப்புக் கெட வேண்டாம் என்பதற்காகச் சேலம், நாமக்கல், குடியாத்தம், கரூர் என்று மூட்டை தூக்கிக் கொண்டிருந்தார். வாரக் கடைசியில் சென்னைக்கு வந்து ஒரு பகல் பொழுது மட்டுமாவது குழந்தைகளோடு இருந்து விட்டுப் போனால்தான் அவருக்குத் திருப்தியாக இருக்கும். பன்னிரண்டு வருஷம் இப்படியே பரபரத்து ஓய்ந்து போய், சம்பிரதாயமான 'ரிடையர்மெண்ட்' என்கிற ஓய்வும் வந்தது.

''இவருக்கு மத்தவா மாதிரி சாமர்த்தியமே கிடையாது. நாலு பேரைப் போய்ப் பார்த்து இங்கே ஒரு டிரான்ஸ்பர் வாங்க முடியல்லே'' என்று அவருடைய மனைவி என்னிடம் அலுத்துக் கொள்கிறபோது எனக்குச் 'சுருக்' கென்று தைக்கும். 'மத்தவான்' பட்டியலில் என் பெயரும் பதிவாகி இருக்கலாம். நானும் சில ஆண்டுகள் சென்னையில் வேலை பார்த்துவிட்டு, 'வன வாசம்' போனவன்தான். ஆனால் என்னுடைய 'வனவாசம்' எட்டு ஆண்டுகள்தான்.



சங்கரராமன் என்கிற பெயர் அவருக்கு இருந்தது. ஆனால் எல்லோரும் 'பெருமாள்' என்றே அழைப்பார்கள். எதனால் அப்படி ஒரு பெயர் மாற்றம் என்பது அவருக்கே நினைவில்லை.

பட்டை பட்டையாய்த் திருநீறைக் குழைத்துப் பூசிக்கொண்டு, சந்தியாவந்தனம் பண்ணுகிற அழகு அப்படியே கண்களில் நிற்கிறது. கறுப்பு உடம்புக்கு வெண்மையாய்த் துலங்குகிற திருநீறு, கூடுதலாய் ஒரு கம்பீரத்தையே உண்டாக்கும்.

கொஞ்ச காலம் வேதாரண்யத்தில் வேலை பார்த்ததுண்டு. அப்போது அவருக்குக் கதர் பரிச்சயமானது. அது முதல் சட்டையும் வேட்டியும் கதர்தான். அதுவும் கறுப்புக் கரைக் கதர் வேட்டி அவருக்கு மிகவும் விருப்பமானது. மற்றபடி அவருக்குக் கட்சி அபிமானம் எல்லாம் கிடையாது. ஆனால் அவருடைய கதர் உடையை வைத்துக் 'காங்கிரஸ்காரன்' என்று அதிகாரிகள் வெறித்ததுண்டு.

ஒருவேளை, இந்த உடையே கூட அவருக்கு 'டிரான்ஸ்பர்' கிடைப்பதற்குத் தடையாக இருந்திருக்கலாமோ என்னவோ? ஆனால் அவருக்கு அதிலெல்லாம் நம்பிக்கையில்லை.

ஆண்டுக்கு நாலு முறையாவது மேலதிகாரிகளைப் போய்ப் பார்த்து, சென்னைக்கு மாற்றிக் கொடுங்கள் என்று எழுதிக் கொடுத்துக் கேட்பார். ஒரு பயலும் நமக்கு டிரான்ஸ்பர் தர மாட்டான். ஊழல் கட்சி. ஊழலில்லாத கட்சி எது ஆட்சிக்கு வந்தாலும் இதுதான்'' என்பார். அந்த வீச்சின் பொருள் எனக்கு முதலில் புரியவில்லை. நான் வனவாசம் போய், நானும் அனுபவித்த போதுதான் அவருடைய குமுறல் எனக்குப் புரிந்தது.

தெருவில் எங்காவது மனிதர் எதிர்ப்பட்டு விட்டால் தீர்ந்தது. பேச்சு... பேச்சு... அப்படி ஒரு பேச்சு.

விஷய ஞானம் அதிகம். அவர் வேலை பார்த்த இலாகா சம்பந்தமான விதிகள், நடைமுறைகள் எல்லாம் விரல் நுனியில் வைத்திருப்பார். யாருக்காவது ஏதாவது சந்தேகம் என்றால் 'கூப்பிடு பெருமாளை' என்று அழைத்து நுணுக்கங்களைப் புரிந்து

**சுப்ர.பாலன்**

கொள்வார்கள் அதிகாரிகள் உட்பட! சூதர்க்கம், குறுக்குப்புத்தி, எதுவும் கிடையாது. அவர் அளவுக்கு அதை விடவும் குறைவான விஷய ஞானமுள்ளவன் எல்லாம் ஊரை விற்றுக் கொண்டிருக்கிற நாட்களில் 'பெருமான்' ஒரு தனிரகம்.

ரிடையர்மெண்ட் ஆனதில் கணிசமாகப் பணம் வந்தது.



பெண்களுக்குக் கல்யாணம், ஒரு பையனுக்கு மேல் படிப்பு என்று முக்கால்வாசிப் பணம் சரியாய்ப் போனது.

மிச்சப் பணத்தைப் பாதுகாக்க வேண்டும் என்பதில் மிகவும் அக்கறை எடுத்துக் கொண்டார்.

"யேய்... பசங்களா! கொஞ்சம் பணம் மீத்து வச்சிருக்கேன். சமயத்துக்கு வேணுமாயிருக்கும். இப்பவே சொல்லிப்புடறேன். எப்பவாவது எனக்குத் தலைவலி கால்வலின்னா... அலட்டிக்காதீங்க. அது போக்குல விட்டுடுங்க. சரியாகணும்னு இருந்தாச் சரியாயிடும்" என்று மிகுந்த எதிர்பார்ப்போடு நாட்களை நகர்த்தினார்.

அவருக்கு லேசாய் 'பி.பி. இருப்பதாய்த் தெரிந்தது. பக்கத்து வீட்டுப் பையன், டாக்டருக்குப் படித்தவன் யதேச்சையாகச் சோதனை பண்ணியபோது தெரிந்தது. அப்போது சொன்னதுதான் மேலேயுள்ளது.

"வருமே... பி.பி. சி.பி, டி.பி எல்லாம் வரும்! எதுக்காகக் கோடி கோடியாப் பணம் போட்டுத் தெருத் தெருவா நர்சிங்ஹோம் கட்டி வ சிருக்கீங்க? கொஞ்சம் பணம் வச்சிருக்கான்னு தெரிஞ்சாப் போதுமே. ஒரு சின்ன ஆபரேஷன்னு சொல்லுவீங்க. நாப்பதாயிரம் அம்பதாயிரம்னு அள்ளிட்டுப் போயிடுவீங்க. அட... போங்கப்பா... நமக்கு ஒண்ணும் வாணாம்..."

பக்கத்து வீட்டு டாக்டர் பையனிடம்

பொரிந்து கொட்டிவிட்டாலும் பெருமாளுக்குப் பயம் பிடித்துக்கொண்டது என்னவோ நிஜம்தான்.

நெஞ்சில் வலி உண்டானது. வலது கையால் மார்பைத் தேய்த்து விட்டுக் கொண்டே சொன்னார். "என்னய்யா...? கணக்குச் சரிப்பட்டு வரல்லே போலே இருக்கே... சின்னவன் படிச்சு முடிக்கற வரைக்குமாவது தாக்குப்பிடிக்கணுமே..." என்று கவலைப்பட ஆரம்பித்தார். அவர் கவலையை வெளிக்காட்டியது அதுதான் முதல் முறை. பிள்ளைகளும் மனைவியும் மிகவும் பதறினார்கள். நண்பர்களும் வற்புறுத்திச் சொன்னதன் பேரில் வேண்டா வெறுப்பாக ஒரு சோதனைக்குப் போகத் தயாரானார். நாலாயிரம் ரூபாய்க்குப் பில் வந்தது.

"அட... நீங்களும் பையனை எல்.கே.ஜிலே சேர்த்துட்டு வர்றீங்களா?"
— தஞ்சை தாமு

"இப்போ ஒண்ணும் பயப்பட வேண்டாம். மருந்துலே சரிப்படுத்தப் பார்க்கலாம். அடுத்த தடவை இப்படி சிரமம் வந்தா... சின்னதா ஒரு சர்ஜரி பண்ணிடலாம்..." என்று டாக்டர் சொன்னபோது சிரித்துக் கொண்டே என்னைப் பார்த்தார். பிள்ளைகளைப் பார்த்தார்.

"அட போங்கடா! இன்னிக்கு நாலாயிரம் போச்சு. அவன் சொன்ன 'சின்ன ஆபரேஷனு'க்கு எவ்வளவு ஆகும்னு கேட்டுப் பாரு... பொட்டுப் பொடியெல்லாம் வித்தாகணும். சொன்னாக் கேளுங்கடா. அறுபது வருஷம் கிழிச்சுப் புரட்டியாச்சு. இனிமே என்ன? வாசல்லே யார் வரான்னு பார்க்க வேண்டியது தானே?"

மரணம் உள்பட இயல்பானது என்று எடுத்துக் கொள்கிற பக்குவம் இப்போதெல்லாம் துறவிகளுக்குக் கூட வருவதில்லை. அது நண்பருக்கு இருந்தது.

அடிக்கடி இப்போதெல்லாம் நண்பரைச் சந்திக்க முடிகிறதில்லை. அந்த வருத்தம் அவருக்கும் உண்டு. ஒரு கடிதத்தில் போன மாசம் எழுதியிருந்தார்.

"சின்னவனும் வேலைக்குப் போய் விட்டான். பேரன் பேத்தி எல்லாம் பார்த்தாகி விட்டது. ஆனால் நான் ஒரு தீவாகி விட்டேன். யாருமே வருவதில்லை. ஏதோ ஒரு பயம். என்னைப் பற்றி இல்லை. மற்றவர்களின் எதிர்காலம் பற்றி. பயப்பட்டு என்ன ஆகப் போகிறது? இப்போதெல்லாம் நீயும் கூட வருவதில்லை. எங்கேயோ டிம்பக்டுவில் போய்க் குடியிருக்கிறாய்..."

எனக்குக் கொஞ்சம் மனசில் வலி ஏற்பட்டது. எப்படியும் இந்த சனி ஞாயிறில் ஒரு நடை போய்விட்டு வரவேண்டும் என்று எண்ணிக் கொண்டேன்.

'ஓய்வுபெற்று வீட்டில் கிடக்கிறவனுக்குச் சனி ஞாயிறு என்ன வேண்டிக் கிடக்கிறது? தலை முழுவதும் வழுக்கை விழுந்த பின்னால் கண்ணாடி பார்த்து வாரிக் கொள்கிற மாதிரி...' சிரிப்பு வருகிறது!

காலையில் பேப்பர் வந்தது. வழக்கம் போல் முதலில் 22-ம் பக்கத்து இடப்புற மூலையில் பார்வை பதிந்தபோது...

நண்பரின் பெயர்! 'சங்கரராமன் வயது 64, ஓய்வுபெற்ற....' அதிர்ச்சியாயிருந்தது. உடனே புறப்பட்டேன். 'நாலு மாத இடைவெளிக்குப் பிறகு இப்போதுதான் நேரம் கிடைத்ததா?' என்று அவர் கிண்டல் பண்ணுவதாய் ஒரு பிரமை.

வீட்டு வாசலில் ஒன்றிரண்டு நண்பர்கள். "சின்னவன் எங்கேயோ திருச்சிப் பக்கம் வேலைக்குச் சேர்ந்திருக்கான். முதல் மாசச் சம்பளம் வாங்கிக் குடுத்துட்டு முந்தா நாள்தான் ஊருக்குப் போனேன்..." யாரோ சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

பெரியவன் வந்தான். அவன் கைகளைப் பற்றி அழைத்துப் போனான். பட்டை பட்டையாய்த் திருநீறு உடம்பில் அப்படியே இருந்தது. செத்துப் போன பிறகு கூடச் சிரித்துக் கொண்டிருக்கிற மாதிரி ஓர் உதட்டுச் சுழிப்பு. தலை மாட்டில் அவருடைய மனைவி.

"சொன்னபடியே ஆச்சு மாமா. உங்களைப் பத்திக் கூடப் போன வாரம் பேசிண்டிருந்தார். 'இவனைக் கூடக் காணல்லே பாரு'ன்னு சொன்னார்..."

பெரியவன் சொன்னான். "ராத்திரி ஒம்பது மணிக்கு நெஞ்சு வலின்னு சொன்னார். சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு வேணாக் கூட்டிண்டு போடான்னார். நான்தான் கேட்கல்லே. பக்கத்து நர்சிங்ஹோமுக்குக் கூப்பிட்டேன். 'ஏமாந்துடாதே. நடந்தே



# அருள்வாக்கு

வாழ்க்கை என்று எதைச் சொல்கிறோம்? சாப்பிடுவது, கல்யாணம் பண்ணிக்கொள்வது, குழந்தை குட்டி பெறுவது, படிப்பது, ஸம்பாதிப்பது, ஊர் ஊராய் ஓடுவது, பாட்டு கேட்பது, ஸினிமா பார்ப்பது, நாவல் படிப்பது என்று இப்படி அநேக கார்யங்களைப் பண்ணுவதைத்தான் வாழ்க்கை என்றும் ஜீவனம் என்றும் சொல்கிறோம். இந்தக் கார்யங்களில் நம்மைச் செலுத்துவதாக அநேக எண்ணங்கள் இருக்கின்றன. இந்த எண்ணங்களையெல்லாம் பிறப்பிப்பது மனஸ், கார்யங்களில் நம் இந்த்ரியங்களை ஏவுவதும் அதுதான். ஆகையால் தனி ஜீவன் என்கிறவனின் ஸாரமாகத் தோன்றுகிற ஜீவனம் என்பதே மனஸை ஸென்டராக வைத்து நடத்தப்படுவதுதான். எண்ணத்தினாலும் கார்யத்தினாலும் உருவாகிற ஜீவனம் என்பது எண்ணமும் கார்யமுமில்லாத ஆத்மாவைக் குறித்ததாக இருக்க முடியாது தானே?

ஆத்மா மனஸிலே இல்லை என்றால் ஆத்மா வேறே. மனஸ் வேறே. ஆத்மாவுக்கு வேறாக மனஸ் இருக்க வேண்டும். ஆத்மாவுக்கு அந்நியமாக, இரண்டாவதாக, த்விதீயமாக இருப்பதே மனஸ் என்றாகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

போகலாம்'னு சொல்லி வந்தார். 'சின்னவனுக்குத் தகவல் கொடு'ன்னு சொன்னார்.

"டாக்டர் தொட்டுப் பார்த்து எல்லாம் முடிஞ்சு போச்சுப்பான்னார். அப்பா எந்த நிமிஷமும் தயாரா இருந்தார்னே சொல்லணும்..."

யாரும் அழுது அட்டகாசம் பண்ணாத அமைதி அங்கே பசையாய் ஒட்டியிருந்தது.

நிமிர்ந்து பார்த்தேன். சுவரில் சுவாமி படத்துக்குக் கீழே, ஒரு வாசகம் எழுதி ஒட்டியிருந்தது. அவருடைய கையெழுத்துத்தான்!

'FACE LIFE AS IT COMES.'

சென்ற முறை வந்தபோது அவர் சொன்னது காதுகளில் ஒலித்தது. "வாசல்லே யாரு வரான்னு பார்க்க வேண்டியதுதான்."

சாஸ்திரிகள் யாரோ உறவுக்காரரிடம் கணக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். "எப்படியும் ஒரு இருபதாயிரம் வேண்டியிருக்கும்."

படுத்திருந்த நண்பர் முகத்தில் புன்னகை நிலைத்திருந்தது.

# ஸ்ரீ ராம பக்த ஹனுமான்

துயர் தீர்க்கும்
பயம் போக்கும்
பலம் சேர்க்கும்
கதைகள்

# கல்கி

6.8.2000 இதழ்
தொடங்கிச்
சொல்கிறார்



## கல்யாணபுரம் ஆராவமுதன்

# தேடலின் முடிவில்...!

கூவம் ஆற்றுக்கரையில் பெருகிக் கிடக்கும் பல ஆயிரம் குடிசைகளில் பத்து வயது செல்வியின் குடிசையும் ஒன்று. இரவானால் களைகட்டி விடும் சுற்றுலாப் பொருட்காட்சி கூவத்தின் மறுகரையில். அதில் வானத்தை முட்டுவது போல வண்ண விளக்குகளோடு சுற்றிக் கொண்டிருக்கும் ராட்சஸ ராட்டினம். பள்ளிக்கூடம் முடிந்து வரும் செல்விக்குத் தூரத்தில் தெரியும் அதை கொஞ்ச நேரமாவது பார்த்தால் தான் தூக்கமே வரும். மாநகராட்சி தொடக்கப் பள்ளியில் ஐந்தாம் வகுப்பு படிக்கும் அந்த பிஞ்சு நெஞ்சில், ஒரே ஒருமுறை அந்த ராட்டினத்தில் ஏறிச் சுற்றிவிட மாட்டோமா என்ற சின்ன ஆசை.

சின்ன சின்ன ஆசைகள் கூட ஏழைகளுக்கு இங்கே எட்டாக்கனிதான். செல்விக்கும் அதுதானே நிலை. ராட்சஸ ராட்டினத்தில் ஏற கட்டணம் பத்து ரூபாய். கனவோடு வீட்டிற்கு வருகிறாள். வழக்கம் போல் அங்கே போர்க்களம். ஆபீசர் வீட்டில் பத்துப் பாத்திரம் தேய்த்து அதில் கிடைக்கும் ஊதியத்தை, ஆபீசரின் மனைவி நடத்தும் அழகு நிலையத்தில் கொடுத்து, தன்னை அலங்கரித்துக் கொள்ளும் செல்வியின் தாய், சம்பாதிப்பதையெல்லாம் குடித்தே குதூகலிக்கும் தமது கணவனை அடிப்பதும் திட்டுவதுமாக இருக்கிறாள்.

''சோத்துக்குக்காக குடுக்க வக்கில்லே... சோமாறி நீயெல்லாம் ஏன் வீட்டுப் பக்கம் வர்றே?''



ஸ்ரீராம்

''யாரைப் பார்த்து இன்னா கேட்ட...? இந்தா பத்து ரூவா...'' போதையிலும் தனக்கு உணர்ச்சி இருப்பது போல பத்து ரூபாய் நோட்டு ஒன்றை தன் 'அழகு' மனைவியிடம் பவ்யமாய்க் கொடுக்கிறான்.

''யாருக்கு வேணும் இந்த பத்து ரூவா... இத எடுத்துகினு போயி இன்னும் நூறு ஊத்திக்கோ'' பணத்தை அலட்சியமாய்த் தூக்கிப் போடுகிறாள்.

பள்ளிக்கூடம் முடிந்து வந்த செல்வி, அப்பா அம்மா ஆகிய இரு துருவங்களுக்கு இடையில் கிடக்கும் பத்து ரூபாயைப் பார்க்கிறாள். "அம்மா! அம்மா! அந்தப் பத்து ரூபாயை எனக்குக் கொடும்மா. ராட்டினம் சுத்துறேன்."

''போடி போக்கத்தவளே, இருக்குற பிரச்னையில தலையே சுத்துது. உனக்கு ராட்டினம் சுத்தணுமா'' ஏச்சுகளை வாங்கிக் கொண்டு ஏக்கத்தோடு தூங்கிப் போகிறாள். கனவில் வந்து சுற்றிவிட்டுப் போகிறது அந்த ராட்டினம்! விடிந்ததும் பள்ளிக்குச் சிறகடித்துப் பறக்கிறது அந்தச் சின்னப் பறவை.

படிப்பில் படுசுட்டியான செல்விக்கு, பள்ளிக்கூடமும், தமது வகுப்புத் தோழி அமுதாவும்தான் ஒரே ஆறுதல். அன்று வகுப்பில் அதிக மதிப்பெண் வாங்கிய செல்வியைப் பாராட்டும் ஆசிரியை, "உனக்கு என்ன பரிசு வேண்டும்?" எனக் கேட்க... "உங்க அன்பு மட்டும் போதும் டீச்சர்'' என்கிறாள். பள்ளி முடிகிறது.

"ஏ... போடி. டீச்சர் கேட்டப்போ ராட்டினம் சுத்த ஆசையா இருக்குன்னு சொல்லியிருக்கலாம்" அமுதா கடிந்து கொள்வதை மறைந்து நின்று கேட்டு விடுகிற டீச்சர், அவர்களது ஆசையை உடன்



• படப்பிடிப்பில்...

நிறைவேற்றுகிறார். வானவில்லைத் தொட்டு வந்த பரவசம் அந்தச் சின்ன சிட்டுகளுக்கு. கூடவே பொம்மை ஒன்றையும் டீச்சர் பரிசாக வாங்கிக் கொடுத்து அனுப்ப, பொங்கி வழியும் சந்தோஷத்தோடு வீட்டுக்கு வருகிறாள் செல்வி. கணத்தில் அவளின் சந்தோஷம் எல்லாம் உடைந்து வழிகிறது.

"என்னோட பத்து ரூபாயை எடுத்துக்கிட்டு இல்லேன்னு ஏமாத்தறியா?"

"பத்து ரூபாய்க்கும் குடிச்சுட்டு வந்து எனக்கே காது குத்துறியா?"

அப்பா, அம்மாவின் குடுமிப்பிடி சண்டைக்கு நடுவே பொம்மையோடு நுழைந்த செல்வியை அர்த்தத்தோடு பார்க்கிறாள் அவளது தாய்...

"ஏதுடி இந்தப் பொம்மை... பத்து ரூவாய எடுத்தியா?"

"இல்லேம்மா... டீச்சர்தான் ராட்டினத்துக்கு அழைச்சுக்கிட்டுப் போயி வாங்கிக் கொடுத்தாங்க."

அடுத்தகணம் 'திருட்டுக் கழுதே...' என்ற அலறலோடு அம்மாவின் அறை கன்னத்தைப் பதம் பார்க்கிறது. போதையில் மீசை துடிக்க, பக்கத்தில் கிடந்த உருட்டுக் கட்டையைக் கையிலெடுக்கிறான் அப்பன். சூழ்நிலைக் கைதியாகிவிட்ட அந்தச் சிறுமியின் தோளில் இடியாய் இறங்குகிறது ஓர் அடி. மறுநாள் அமைதியான வகுப்பறையில் செல்வி உட்காரும் இடம் மட்டும் காலியாக இருக்கிறது. அமுதா மௌனமாய் அழுகிறாள். அந்தக் குடிசையில் மாட்டியிருந்த மற்றொரு சட்டைப் பையில், உயிர் குடித்த அந்தப் பத்து ரூபாயைக் கண்டெடுக்கிறான் குடிகாரத் தந்தை!

கடந்த ஆண்டிற்கான தேசியத் திரைப்பட விருதுகளில் 'தமிழில் சிறந்த குறும்படத்திற்கான விருதை தட்டிக்கொண்டு வந்திருக்கும், 'பினைண்ட் ஃபோல்டட்' படத்தின் கதைதான் மேலே நீங்கள் படித்தது. எழுதி, ஒளிப்பதிவு செய்து படத்தை இயக்கியிருப்பவர் எஸ். ஸ்ரீராம். மெயின் ஸ்ட்ரீம் சினிமாவில் முதல் வரிசை ஒளிப்பதிவாளராக இருந்து கொண்டு, அடிக்கடி கலைப்படம் எடுத்து உலக அரங்கில் பேரலல் தமிழ்ச் சினிமாவுக்கு மரியாதை பெற்றுத் தரும் டெரரிஸ்ட், மல்லி, புகழ் சந்தோஷ் சிவனின் உதவியாளர்தான் இந்த ஸ்ரீராம்!

சென்னை தரமணி திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவுக் கலையைப் படித்தவர். இயக்குனர் ஷங்கரின் உதவியாளர் பாலாஜி சக்திவேல் இயக்கிக் கொண்டிருக்கும் 'சாமுராய்' படத்தில் ஒளிப்பதிவாளராக அறிமுகமாகிறார். செங்கல்பட்டு ரயில் நிலையத்தில் படப்பிடிப்பு செய்து கொண்டிருந்த ஸ்ரீராமைப் பிடித்தோம். "ஒரு அறி

முகம் கிடைக்கும் என்றுதான் இந்தக் குறும் படத்தை எடுத்தேன். விருது கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்று ஆரம்பித்தார். 'பிளைண்ட் போல்டட்' படத்தின் கதை, சென்னை குடிசைப் பகுதி ஒன்றில் நடந்த உண்மைச் சம்பவம். இதை நான் செய்தித் தாளில் படித்து விட்டு அதிர்ந்து போனேன். நாம் படமென்று எடுத்தால் இதைத்தான் முதலில் எடுக்க வேண்டும் என்று என் தேடலின் முடிவை அப்போதே அறிந்து விட்டேன்" என்று கூறும் இவர்... 'சினிமாவில் முழு நேர ஒளிப்பதிவாளராக இருப்பதுதான் எனக்கான இடம். நேரம் கிடைத்தால் மட்டுமே இது போன்று செய்ய முடியும்" என்கிறார். சந்தோஷ் சிவன் படத்தைப் பார்த்துவிட்டு என்ன சொன்னாராம், "இப்படியொரு படமெடுப்பதையே அவருக்கு நான் சொல்லவில்லை. எனக்குத் தெரியாமல் படத்தைப் பார்த்துவிட்டுப் பாராட்டினார். மும்பை, செயிண்ட் பீட்டர்ஸ்பர்க், சியோல், சிட்னி, உள்ளிட்ட பல சர்வதேச படவிழாக்களில் கலந்து கொண்டு சிறந்த குறும்படத்துக்கான விருதுகளையும் பெற்றிருக்கிறது. இந்தியன் பனோரமா பிரிவிலும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் இந்தப் படத்தை சர்வதேச ஜூரிக்கள் குழுவும் பாராட்டியிருக்கிறது. "இந்தப் பாராட்டு விருதுகளையெல்லாம் விட, பிரச்னையோடு தொடர்புடைய நம் சமுதாய மக்களின் நேரடிப் பார்வைக்கு இதுபோன்ற படங்கள் செல்ல வேண்டும். தனியார் தொலைக்காட்சிகளில் இதுபோன்ற குறும்படங்களுக்குத் தனி நிகழ்ச்சி மூலம் நேரம் ஒதுக்க வேண்டும். அப்படி ஒதுக்கினால் நேயர்களிடம் அமோக வரவேற்பு கிடைக்கும்" என்று சொல்லும் ஸ்ரீராம், "சர்வதேசப் பட விழாக்களில் கிடைக்கும் விருதுப் பணத்தைக் கொண்டுதான் தயாரிப்புச் செலவை ஈடு கட்ட வேண்டியிருக்கிறது. தொலைக்காட்சிகளின் ஒத்துழைப்பு இருந்தால் இதுபோன்ற மக்களுக்கான சினிமாவை வளர்த்து, புதிய ரசனைக்கான பிளாட்ஃபார்ம் அமைக்க முடியும். இந்தப் படத்தை எட்டு லட்சம் செலவில் தயாரித்திருக்கும் ஆலயம் ஏ. ஸ்ரீராமுக்கு சின்னதாய் ஒரு கோயில் கட்டினால் தகும்" என்கிறார்.

ஒருநாளைக்கு ரூபாய் இருபத்தையாயிரம் வாடகையில் அகேலா கிரேன் மூலம் படப்பிடிப்பு செய்துள்ளதோடு, டிடிஎஸ் ஒலி அமைப்புடன் கூடிய முதல் குறும்படம் இது என்கிறார். இருபத்து இரண்டு நிமிடம் ஓடக் கூடிய இந்தப் படத்தில் மல்லியில் நடித்து கலக்கிய சிறுமி ஸ்வேதா, செல்வியாக வாழ்ந்து பார்வையாளர்களின் மனத்தைத் திருடி விடுகிறாள். செல்வியின் தோழியாக வரும் சிறுமி ஞானப்பிரியாவிற்கும் 'திருட்டி'ல் பங்குண்டு. வானப்பிரஸ்தம் படத்திற்கு எடிட்டிங் செய்து தேசிய விருது பெற்றிருக்கும் ஸ்ரீகர் பிரசாத்தான் இந்தப் படத்திற்கும் எடிட்டிங். இசையமைத்திருக்கும் கரந்த், வசனம் எழுதியிருக்கும் ராஜா சந்திரசேகர், டி.டி.எஸ். செய்திருக்கும் எஸ். ஸ்ரீதர் என்று படத்தில் பணியாற்றியிருக்கும் அனைவருமே போட்டி போட்டுக் கொண்டு இதயம் திருடியிருக்கிறார்கள்!

— விஷ்வல்தாசன்

### பங்சரான காங்கிரஸ் பலூன்!



சமீபத்தில் தென் சென்னை காங்கிரஸ் சார்பில் காங்கிரஸ் விளம்பர பலூன் ஒன்றைப் பறக்க விட்டார் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன். முதலில் மேலே ஏறிய பலூன், காற்று இறங்கி விட்டதால் தரையிறங்கியது. மறுபடியும் பஞ்சர் ஒட்டி மேலே ஏற்றினார்கள் "என்ன இது... காங்கிரஸ் தலைவர் பலூன் விடுகிறார் என்று நீங்கள் கிண்டலாக நினைக்கக் கூடாது. நாளை கோட்டையில், 'நம் கொடி உயரப் போவதற்கு இது முன்னோடி' என்று ஒரு போடு போட்டார் இளங்கோவன். சரிதாங்க!

– கௌசி

படம்: ராஜன்

# சதிக்கு ஆதாரம் ஸ்டாம்ப்!



• விஜய், ஸ்ரீமன், மதி



• கே. விஜயன்



• எம்.என். ராஜம், ராஜேஸ்வரி, ஏ.ஆர்.எஸ்.

மந்தைவெளியில் உள்ள நிழல்கள் ரவியின் வீட்டில் அபிநயா கிரியேஷன்ஸின் 'கேள்வியின் நாயகனே' படப்பிடிப்பு. உணவு இடைவேளை என்பதால், இரண்டொருத்தர் நின்று கொண்டும், சிலர் சௌகரியமாக சிலர் சாஷ்டாங்கமாய் நீட்டிப் படுத்தும் ரெஸ்ட் எடுத்துக் கொண்டிருந்தனர்.

டைரக்டர் சுந்தர். கே.விஜயனின் கார் வந்து நின்றவுடன் ஒரே சுறுசுறுப்பு. கேமராமேனுக்கு இன்ஸ்டிரக்ஷன்ஸ் கொடுத்துவிட்டு, நம்மிடம் பேசினார். "தயாரிப்பாளர் கே. பாலாஜியின் படங்களுக்கு ஆஸ்தான டைரக்டரான இவரது அப்பா கே. விஜயன், அறுபது படங்களுக்கு மேல் இயக்கியவர். "எனக்குப் படிப்பு ஏறவேயில்லை. எஸ்.எஸ்.எல்.சியில் பெயில். படிப்பு வேணாம்! உனக்கு எதிலே ஆர்வமோ, அதில் போய்ச் சேர்ந்து கொள்" என்று ஆசிரியர் ஆசிர்வதித்தார். அப்பாவிடமே உதவியாளராக சேர்ந்து விட்டேன். சினிமா நுட்பங்களைக் கற்றுக் கொண்டேன். சொந்தமாகப் படங்களை இயக்கினேன். அப்புறம் டி.வி. சீரியல்கள். சில்க் ஸ்மிதாவை வைத்து, எடுத்த 'பார்வைகள்', 'மடிசார் மாமி' இரண்டும் எனக்கு நல்ல பிரேக் கொடுத்தன. டைரக்டர் பாலசந்தர் ஆசியோடு ஜன்னல், ஊஞ்சல், குகன் என்று

லிஸ்ட் நீண்டு கொண்டே இருக்கிறது!"

**அ**பிநயா இரியேஷன்ஸ்"க்கு இது ஏழாவது படைப்பு. இந்த, 'கேள்வியின் நாயகனே'வுக்கு நல்ல வரவேற்பு" என்கிறார் அபிநயாவின் விஜய்.

கேள்வியின் நாயகனான ஸ்ரீமன் தாம் 'இரண்டாவது பிறவி' எடுத்திருப்பதாகக் கூறுகிறார். "தெலுங்குப் பட ஸ்டண்ட் காட்சியொன்றில், மேலிருந்து குதித்த போது, கீழே விழுந்து, முதுகுத்தண்டில் பலத்த அடி! எட்டு மாதம், ஆஸ்பத்திரியில் மோட்டுவளையையும், நர்ஸ் முகத்தையும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய கட்டாயம். பிழைத்தது பெரும் அதிர்ஷ்டம்!" என்று உணர்ச்சிபொங்க ஆக்ஷனுடன் விவரிக்கிறார் ஸ்ரீமன்.

இசையமைப்பாளர் மதுவிடம் ஒரு கேள்வி. "டி.வி. தொடரில் ஒரு எபிசோடுக்கு இசையமைக்க எவ்வளவு நேரமாகும்?"

"சராசரியாக ஐந்து எபிசோடுகளுக்கு பின்னணி இசை அமைக்க ஒரு நாள் பிடிக்கும்."

**டை**னிங்டேபிளில் அமர்ந்து ஸ்டாம்பு ஆல்பத்தைப் புரட்டிக் கொண்டிருந்தார் எம்.என்.ராஜம். அவருக்குப் பக்கத்தில் - நடிகை ராஜேஸ்வரி. இன்று, பட வாய்ப்புகளைத் தவிர்த்து, டி.வி. சீரியல்களில் அதிகக் கவனம் செலுத்துவதாகக் கூறினார். சினிமாவில் தங்கை கேரக்டர்களுக்கு மட்டுமே கூப்பிடுவதால் இந்த முடிவாம்.

ஒரு பணக்கார அம்மா கண்டிப்பே இல்லாமல், மகனை பாசத்தைக் கொட்டி வளர்க்கிறாள். கண்டிக்காத பிள்ளை உருப்பட்டு விட்டால், கதை நகராதே! பிள்ளைக்குக் கெட்ட சகவாசங்கள். 'பையனுக்குக் கல்யாணமாகி, பிறக்கும் பிள்ளைக்குத்தான் சொத்து. அது வரை நீ பாதுகாவலன்' என்று உயில் எழுதுகிறார் அம்மா. ஆத்திரத்தில் அம்மாவைக் கொலை செய்யச் சதித் திட்டம் தீட்டுகிறான் பையன். அவனே செட்-அப் செய்து வீட்டுக்கு அழைத்து வரும் பெண், சேம் சைடு கோல் போட்டு, அம்மாவுடன் சேர்ந்து கொண்டு மகனுக்குத் தண்ணி காட்டுவதுதான் 'கேள்வியின் நாயகனே' கதை.

ஸ்டாம்ப் ஆல்பத்தை எம்.என். ராஜம் புரட்டுவது போல காட்சி ஒன்று படமாக்கப்பட்டது. அதைப் பற்றிக் கேட்டபோது, "ஸ்டாம்ப்தான் சதிக்கே ஆதாரம்" என்றார்.

எம்.என்.ராஜத்தின் தம்பியாக நடிக்கும் ஏ.ஆர்.எஸ்.ஸிடம், "என்ன சார்! இந்தத் தொடரில் உங்களுக்கு இன்ஸ்பெக்டர் ரோலா?" என்று கேட்டபோது, "சினிமாவிலேயே நான் போலீஸ் வேடம் போடுவதை நிறுத்தி விட்டேனே! போரடித்து விட்டது" என்றார்!

— கௌதம்ராம்

# V.P. Muthaiah Pillai Meenakshi Ammal



## Arts & Science College For Women

KRISHNANKOVIL - 626 190
Srivilliputtur,
Virudhunagar District. Ph: 89119

**ADMISSION FOR THE ACADEMIC YEAR 2000-2001**

### UNDER GRADUATE COURSE:

- 1. B.Com.,
- 2. B.C.S., (Corporate Secretaryship)
- 3. B.Sc., Computer Science
- 4. B.Sc., Bio - Chemistry
- 5. B.Sc., Physics
- 6. B.Sc., Microbiology
- 7. B.A Tamil (Journalism & Computer)

### POST GRADUATE COURSE:

- 1. M.F.C. Master of Finance & Control
- 2. P.G.D.C.A Postgraduate Diploma in Computer Application
- 3. M.Sc., Bio Chemistry
- 4. M.Sc., * Computer Science And Information Technology

* (Subject to Application with M.K. University)

Note : 1. Hostel facilities available
2.Bus facilities from Rajapalayam And Sivakasi will be extended from this year.

CORRESPONDENT/PRINCIPAL
V.P.M.M. Matric/Hr. Sec. School, ☎ 89101
V.P.M.M Arts & Science College for Woman, ☎ 89119

CO-ORDINATOR ☎ 89337
Indira Gandhi National Open University

CHAIRMAN ☎ 61074
V.P.M.M TRUST, 40. North Car Street, SRIVILLIPUTTUR - 626 125

# ஒரு ஸ்பூன் ஜெர்மனி; அரை ஸ்பூன் ஸ்விட்சர்லாந்து!

அந்திப் பொழுதின் செம்பஞ்சுப் படர்வைக் களைந்துவிட்டு, பொன்னாபரணங்களைப் பூண்டு நிற்கும் பேரழகியாக காலை வெயிலில் ஜொலிக்கிறது மலைத் தொடர். சியான் நகரின் எந்தப் பகுதியிலிருந்து பார்த்தாலும் 'இதோ, நான் இருக்கிறேனே, என்ன கவலை?' என்று அபயம் அளிக்கிறது. ஜெர்மனிக்கும் ஃப்ரான்ஸுக்குமிடையே நசுங்கிக் கிடக்கும் சுவிட்சர்லாந்து பகுதியின் வாலேய் மாவட்டத்தின் முக்கிய நகரம் சியான். ஜெர்மனியில் ரைன் போல் இங்கு ரோன்- பக்கிங்ஹாம் கால்வாயின் தம்பிப் பாப்பா போல் சிணுங்கிக் கொண்டு ஓடுகிறது!



• மவுண்ட் ஃபோர்ட் சிகரத்தில்...

பிரான்ஸுடன் போட்டி போடும் திராட்சைத் தோட்டங்கள் எங்கு பார்த்தாலும் மலைச் சரிவுகளின் கீழ் மட்டங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. திராட்சையிலிருந்து தயாரிக்கப்படும் ஒயின் பானம் குறித்துச் சப்புக்கொட்டியபடி பெருமையடித்துக் கொள்கிறார்கள் உள்ளூர்க்காரர்கள்.

"ஏற்றுமதியே நிறுத்திட்டோம். விளையற திராட்சையில எங்க உபயோகத்துக்குத்தான் ஒயின் தயாரிக்கக்க முடியுது..."

இடுப்புயரத்துக்கும் குறைவாக சற்று கட்டை குட்டையாய் நிற்கும் கொடிகளில் குறுமிளகு போல் சின்னதாய்ப் பிஞ்சு விட்டிருக்கிறது திராட்சை.

''ஐயோ! இத்தனை சின்ன கொடி காய்க்கிறது பாருங்கள்..."

"சின்ன கொடியா! பதினைஞ்சு வருஷத்துக் கொடி அது-- ஆனா நாற்பது வருஷத்துக் கொடியிலே காய்க்கிற திராட்சையின் ரஸம்தான் ஒயினுக்கு ரொம்ப உகந்தது..."

நடைபாதை செங்குத்தாக உயர்கிறது.

''லேக் ஸெயின்ட் லியோனார்ட் பார்க்கப் போகிறோம் இப்போ..."

"அட! மலை உச்சியில ஒரு ஏரியா...?"

"இல்லை மலைக்கு அடியிலே..."

"இந்த இடக்குதானே வேணாங்கறது..."

"இடக்கேயில்லை. நிஜமாக."

நுழைவுச் சீட்டு வாங்க வேண்டி

சீதா ரவி

மெள்ள வெளிச்ச மூட்டுகின்றன.

வியப்பும் பீதியும் பொங்கும் நம் மனநிலை படகோட்டியைத் தூண்டி விடுகிறது.

''என்ன...? ஈரம் கசியும் சுவர் இடிந்து தலை மேலேயே விழுந்துடுமோன்னு பார்க்கறீங்களா...?'' என்கிறார் பயணிகளைப் பார்த்து.

"பயப்படாதீங்க அப்படியெல்லாம் விழுந்துடாது... ஏன்னா, நேத்திக்குத்தான் ஒரு பெரிய பாறை விழுந்து இருபது பேரைப் படகோட கவிழ்த்தது.... அதனால

• பாதாள ஏரி!



• அடிவாரத்தில்....

யிருக்கிறது.

''இந்தப் பக்கம் வாங்க...''

போனால்... மலைக்குள் பாதை குடைந்து சென்று சடாரென்று படியிறங்குகிறது. படிகளின் முடிவில் பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறை போன்ற கும்மிருட்டுக் குகை. அதன் தரையில்... நீளும் நீர்ப் படலம், ஆட்டி வைத்த எண்ணெய்க் குடமாகக் கனத்த கருமையில் அசைவற்று நிற்கிறது.

"இந்தப் படகுல ஏறிக்குங்க..." துடுப்புகளுடன் காத்திருக்கிறார் வழிகாட்டி.

இருட்டுக்குள் மெள்ள நகர்கிறது படகு. 'சள்ளக் சள்ளக்' என்று நீரைத் துடுப்பு தள்ளும் ஓசை நீங்கலாக கடும் அமைதி. குகைச் சுவர்களில் கசியும் ஈரமும் தண்ணீர்ப் பரப்பின் அழுத்தமான குளிர்ச்சியும் சேர்ந்து முதுகுத் தண்டைச் சொடுக்கிச் சிலிர்ப்பூட்டுகின்றன. சுவரில் ஒளித்துப் பொருத்திய மங்கலான மின் விளக்குகள்

திரும்பவும் இன்னிக்கு விழாது. அங்க பாருங்க நேத்து விழுந்த படகு கவிழ்ந்து கிடக்கு...''

அவர் சுட்டிக்காட்டிய திசையில் மங்கலான மஞ்சள் வெளிச்சத்தில் ஒரு படகு நீருக்கு அடியில் கவிழ்ந்து கிடக்கிறது!

6

"அச்சோ!"

"ஹோஹோவென்று இருட்டுக் குகை எதிரொலிக்கச் சிரிக்கிறார் அவர்!

"சும்மா சொன்னேன்! பயந்துட்டீங்களா...? இப்படி தினமும் ஒரு கதை சொன்னாதான் எனக்கும் பொழுது போகும், வாங்கற சம்பளமும் செரிக்கும்..."

இழுத்துப் பிடித்த மூச்சை மெள்ள விடுகிறோம்.

"அண்ணாந்து மேல பாருங்க... நட்டும் போல்டும் போட்டு முறுக்கி வைச்சிருக்கில்லே..." குகைக் கூரையைச் சுட்டிக் காட்டுகிறார்.

"இந்தக் குகைக்கு மேலே மலைச் சரிவுல ஒரு விவசாயி திராட்சைத் தோட்டம் போட்டிருக்கார். ராத்திரியோட ராத்திரியா அவரோட செடிங்களைத் திருடிட்டுப் போயிடறாங்களாம். அதுக்காக எல்லாத்தையும் தரையோட நட்டு போல்டு போட்டு முடுக்கி வைச்சிருக்கார்...."

அந்த இருட்டின் மாயாஜாலத்தில் அவர் விடும் சரடுகளெல்லாமே நிஜமெனத் தோன்றுகின்றன. அவநம்பிக்கையையும் பகுத்தறிவையும் அபகரித்துக் கொள்ளும் அந்த மர்மச் சூழலை மேலும் சாதகமாக்கிக் கொள்கிறார் படகோட்டி.

"தண்ணீருக்குள் மட்டும் கை வைத்து விடாதீர்கள்! முதலைகள் பசியோடு காத்திருக்கும்..."

– ஒரு கைப்பிடியளவு நிலக்கடலையை எடுத்து அவர் தண்ணிக்குள் வீச கொழுத்துப் போன சோம்பேறி மீன்கள்தான் வந்து மெள்ளச் சுவைக்கின்றன.

"அங்க பாருங்க, அந்தக் கடைசியில... வர்ஜின் மேரி. இங்கேருந்து பத்திரமா திரும்பிப் போகணும்னா மறக்காம கும்பிட்டுக்குங்க... அவ மனசு வைக்காட்டி நீங்க வெளிய போகவே முடியாது..."

"அப்புறம், செவ்வாய்க் கிழமைகள்ல மட்டும் மேரிக்கு விடுப்பு. அதனால குகையை மூடிடுவோம். சவாரி, விளக்கு வெளிச்சம் எதுவும் கிடையாது. மீனுங்க கூட அன்னிக்குப் பட்னிதான்..."

நெளியும் ஜிகினாப் பொய்களுக்கிடையே அந்தப் பாதாள ஏரி பற்றித் தெரிந்து கொண்ட உண்மைகள் :

அறுபதுகளில் ஒரு சமயம் இந்தப் பிரதேசத்தில் நிலநடுக்கம் ஏற்பட்டு மலைச் சரிவின் ஒரு பகுதியைக் காவு கொண்டது. மலை விழுந்த இடம் ஒரு குகையாக உருவாகியது. அந்தப் பள்ளமான குகைப் பகுதியில் ஒரு தெள்ளிய நீர்த்தேக்கம் கண்டு பிடிக்கப்பட்டது. பனி உருகும் காலத்தில் பக்க மலைகளிலிருந்து நீர் வந்து பள்ளத்தை நிரப்பி விடும். கூரை தொட தண்ணீர் நின்றால் படகு விட்டுப் பணம் சம்பாதிக்க முடியுமா...? பார்த்தார்கள் சுவிஸ் சுற்றுலாத் துறையினர். ஒரு பம்ப் செட் பொருத்தி, தண்ணீரை இரைத்து ஒரே சீரான மட்டத்தில் அது அமையும்படி ஏற்பாடு செய்து விட்டார்கள். 'அண்டர்கிரவுண்ட் ஏரி லேக் செயின்ட் லியோனார்ட்' என்று விளம்பரப்படுத்தி படகுச் சவாரிக்கும் வந்தியத்தேவனைப் போன்றவொரு துடுப்புக்காரனுக்கும் ஏற்பாடு செய்து விட்டார்கள்.



• மேலிருந்து கீழே பார்த்தால்...

ஆல்ப்ஸ் மலைகளையும் பனிச் சறுக்கு விளையாட்டையும் காந்தமாக்கி உலகின் பெரும்பகுதி சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் ஸ்விட்சர்லாந்துக்காரர்கள் ஒரு காலத்தில் அந்த மலைத் தொடரைக் கண்டு பயந்து ஒதுங்கினார்கள் என்றால் நம்ப முடிகிறதா?

பதினெட்டாம் நூற்றாண்டு வரை பனி மலைகள் பிசாசுகளின் இருப்பிடமாகவும் மர்ம சக்திகளின் வசிப்பிடமாகவும் கருதப்பட்டு வந்தனவாம். அங்கேயே வாழ்ந்த ஒருசில மக்கள் தவிர யாருமே நெருங்காத

அமானுஷ்ய பிரதேசங்கள் விஞ்ஞானிகளால் மெள்ள மெள்ள வெளியுலகுக்கு அறிமுகமாயின. ஆல்ப்ரெட் வான் ஹாலர் என்ற இயற்கை ஆய்வாளர் தமது ஆராய்ச்சிக்கிடையேயும் மலைகளின் அழகில் மயங்கி ஒரு கவிதை எழுதி விட்டார். 'தி ஆல்ப்ஸ்' என்ற இக் கவிதை ஆல்ப்ஸின் வரலாற்றிலும் சுவிட்சர்லாந்தின் வரலாற்றிலும் ஒரு திருப்புமுனையாக அமைந்து விட்டது. அதற்குப் பின் பல தேசத்துக் கவிஞர்களும் சிந்தனையாளர்களும் பாடிப் பரவி ஆல்ப்ஸுக்கு உலகெங்கும் ரசிகர் மன்றங்கள் நிறுவ காரணமாகிவிட்டார்கள்.

நெருங்கிப் பார்த்ததும் 'ஏறு ஏறு' என்று சிகரங்கள் சவால் விட, மலையேறி முகடுகளைத் தொட்டுக் கொடி நாட்டும் வீர விளையாட்டு பிரபலமாயிற்று. 1865ல் மாட்டர் ஹார்ன் சிகரத்தை 26 வயது லண்டன் இளைஞர் எட்வர்ட் விம்பர் அடைந்தார். 14,698 அடி உயரம்! ஏழு முறை முயன்று தோற்று எட்டாவது முறையாக வெற்றி கிட்டியது விம்பருக்கு! விஞ்ஞானமும் வசதிகளும் பெருகிவிட்ட இந்நாளில் தூரத்திலிருந்து

* அந்தரத்தில் ஊசல்!

ஆல்ப்ஸைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொள்வதென்பது யாருக்குமே திருப்தி அளிப்பதில்லை. ஒன்று, கஷ்டப்பட்டு ஏறி கொடிநாட்ட வேண்டும்; அல்லது கேபிள் கார்களில் சென்றிறங்கி சிகரத்துக்குச் சிகரம் சறுக்கியோடிக் கொண்டே இருக்க வேண்டும். இரண்டுமில்லையா, கேபிள் கார் கம்பெனியோ, ஸ்கி ரிசார்ட் ஹோட்டலோ நடத்தி ஆல்ப்ஸ் புண்ணியத்தில் கொள்ளை கொள்ளையாகக் காசு பார்க்க வேண்டும்.

மூன்றும் அல்லாது, காசைக் கொடுத்து கேபிள் காரில் போயிறங்கும் ரகத்தில்தான் நம்மைப் போன்ற பூஞ்சை டூரிஸ்டுகள் அடக்கம்.

சுவிட்சைத் தட்டியதும் வந்து நிற்கும் திறந்த கேபிள் காரில் மூன்று பேர் ஏறி அமர்ந்ததும் முன்னே ஒரு குறுக்குக் கம்பி வந்து பாதுகாப்புத் தடையாகப் பொருந்துகிறது. ஜிவ்வென்று ஒரு சின்ன எகிறு எகிறி கம்பிகளில் ஊசலாடியபடி இந்த வண்டிகள் மலையின் மேலே அந்தரத்தில் மிதந்து முன்னேறும் போது ஏற்படும் உணர்வு அனுபவித்தால் அன்றிப் புரியாது.

பனி உருகி அமைத்த பளிங்கு நீரோடைகள் நம் பயத்தைக் கண்டு காலடியில் சிரித்தோடும். அவற்றின் கரைகளில் புல்லிடுக்கில் மஞ்சள் பூக்கள் அண்ணாந்து பார்க்கும். நேரெதிரே மலைகள் 'வந்துவிடு' என்று கரம் விரித்து காத்திருக்கும்; மேலே தலையை நிமிர்த்தினால்... உயிரை உறிஞ்சிவிடுவேன் என்பது போல் ஆகாயம் பயமுறுத்தும்.

அண்டவெளியில் இப்படித் தொங்கிக் கொண்டே போய் ரயில்பெட்டி போன்று நாற்புறமும் மூடிய இன்னொரு கேபிள் காருக்கு மாறி, இருபது நிமிடப் பயணத்தின் இறுதியில் அடைந்த இடம் மவுண்ட் ஃபோர்ட் சிகரம். 3330 அடி உயரம். சிறு சிறு உப்புக் கற்கள் போல் மெல்லிய வெண் பனித்துளிகளை வானம் உதிர்த்தது. பல் கிட்ட வைக்கும் குளிரைப் பொருட்படுத்தாமல் பனியில் கால் வைத்து ஒரு கை அள்ளி எடுத்த போது, பாரதியின் 'தீக்குள் விரலை வைத்தால்' வரியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு ஞாபகம் வந்தது ஷர்மிளா டாகூரின் முகம்தான். இந்தப் பனியில் கண்ணாடி ஷிஃபான் புடைவையும் குட்டை கை ரவிக்கையுமாக 'குன்குனாரஹே' என்று சிரித்துக் கொண்டே ஆடுவது எத்தனை பெரிய சித்திரவதை!

தூரத்தில் ஒரு மரப்பலகை வீடு தென்பட்டது.

"பனியில் மாட்டிக் கொண்டு வழிதெரியாமல் திண்டாடுபவர்கள் இராத் தங்கிக்

# சுந்தர் சி. ஷூவுக்கு இதுதானாம்!

படத்தைப் பார்த்து, வணக்கம் தமிழகம் பாணியில் ஏதோ ஒரு சானலில் குஷ்பு பேட்டி என்று நினைத்து விடாதீர்கள். 'பெப்ரிஸ்' என்ற துர்நாற்றங்களை அகற்றும் ஸ்பிரேவை அறிமுகப்படுத்தும் பிரஸ் மீட்டில் எடுக்கப்பட்ட படம்தான் இது. இந்த ஸ்பிரேவை அறிமுகப் படுத்திய குஷ்பு, "நான் இந்த நிகழ்ச்சிக்கு சும்மா வரவில்லை. இந்த ஸ்பிரேவை எனக்குக் கொடுத்தவுடன் பயன்படுத்தி, திருப்தியடைந்த பின்தான் வர ஒப்புக் கொண்டேன். சினிமா ஷூட்டிங்கில் ஒரு காட்சிக்குப் பயன்படுத்திய உடையை சில நாட்களுக்குப்பின் வேறு காட்சிக்குப் பயன்படுத்துகிறபோது, அதிலிருந்து ஒரு பேட் ஸ்மெல் வரும். அதில் இந்த ஸ்பிரேவை அடித்தால், நிமிடங்களில் துர்நாற்றம் போய், உடையை சங்கடமில்லாமல் அணியலாம். என் கணவரிடம் நிறைய ஷூக்கள் உண்டு. நான் முழுக்க அவற்றை அணிவதால், அதிலிருந்து வரும் துர்நாற்றத்தைப் போக்க நான் இதைத்தான் பயன்படுத்துகிறேன்'' என்றார். நிஜம்தானா சுந்தர். சி?




— எம்

கொள்வதற்கான இடம். அடுப்பு, பாத்திரம், சமைக்க பொருள்கள், படுக்கை எல்லாம் இருக்கிறது... எப்போதுமே திறந்துதானிருக்கும். உங்களில் யாராவது தொலைந்து போக ஆசைப்பட்டால் போகலாம்...''

மவுண்ட் ஃபோர்ட் கேபின் கார் ஸ்டேஷனின் சிப்பந்தி சோம்பலுடன் சிகரெட்டை ஊதியபடி சிரிக்க, அத்தனை பேரும் அவசரமாக மீண்டும் கேபின் காருக் குள் புகுந்து கொண்டோம்.

கேபின் கார் சவாரி குளோஸ் அப் பார்வை என்றால் 'ஹெலிகாப்டர் பயணத்தில் ஆல்ப்ஸை வைட் ஆங்கிளில் பார்க்க முடிகிறது. தூரத்திலிருந்து தெரிந்த சிகரங்களெல்லாம் நெருக்கத்தில் இன்னும் பிரம்மாண்டமாய் இன்னும் வெண்மையாய் மூச்சுத் திணறச் செய்கின்றன.

"மவுண்ட் ரூஜ் போகிறோம் இப்போ..." என்று மீண்டுமொரு கேபிள் காரில் ஏற்றி விட்டார்கள். இறங்கிய இடத்தில் பனியைக் காணோம்!... ஹா இது என்ன...? சென்னையின் வீதியோர டீக்கடை வாசனையல்லவா...?

ஆல்ப்ஸ் மலையின் சிகரத்தில்
அந்தி சாயும் நேரத்தில்....

அங்கேயிருந்த ஒற்றை உணவகத்தில் இந்திய சமையற்காரர் பிரத்யேகமாய்த் தயாரித்த வெங்காயப் பக்கோடா!

யாருக்கு வேண்டும் வெண்பனி! சுடச் சுட பக்கோடாவை கை கையாக அள்ளிச் சாப்பிடும் சுகத்தில் கூட்டம் லயிக்கிறது.

"சீக்கிரம் வாங்க... எருதுச் சண்டை ஆரம்பிக்கப் போகுது..."

ஆனால் நடந்தது bullfight அல்ல.... புல் ஃபைட் - 'அதாவது புல் தரையில் மாடுகள் செல்லமாக முட்டிக் கொண்டு பாவலா காட்டிய காட்சி. மாடு என்றால் சாமானிய மாடல்ல.... கொழுக்க வைத்த காட்டெருமையின் நிறமும் ஆகிருதியும்!

'என்னைப் பார்த்துக் கைகொட்டியா சிரிக்கிறீர்கள்!' என்ற கோபத்தில் ஒரு மாடு திருப்பிக் கொண்டு துரத்தியதும் பயந்து ஓடிய ஒரு பயணி விழுந்து மேலெல்லாம் சாணத்தைப் பூசிக் கொண்டதும் நகைச்சுவை காட்சிகளல்ல....

(தொடரும்)

# காவேரியின் கிராமம்!

“மும்பை சிவப்பு விளக்குப் பகுதியில் மேற்கொள்ளப்பட்ட மருத்துவ பரிசோதனையின்போது எண்ணற்ற பெண்களுக்கு எச்.ஐ.வி. தொற்று இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. தமிழகத்தைச் சேர்ந்தவர்கள் இருவர் 1985ஆம் ஆண்டு சென்னை தாம்பரத்தில் உள்ள சானடோரியம் மருத்துவ மனைக்குக் கொண்டுவரப்பட்டார்கள். அந்தப் பெண்களைப் பார்த்துவரப் புறப்பட்டேன். எய்ட்ஸ் பற்றிய விழிப்புணர்வு இல்லாத காலம் அது. அந்த இரண்டு பெண்களுக்காக நூற்றுக்கும் அதிகமான போலீசார் குவிக்கப்பட்டிருந்தனர். எந்தக் குற்றமும் செய்யாத அந்தப் பெண்களின் கையில் விலங்குகள். இரண்டு பேருக்கே இத்தனை பாதுகாப்பு என்றால்... ஒரு கிராமமே எச்.ஐ.வியால் பாதிக்கப்பட்டால்...? என்று மனசுக்குள் ஒருபயம் எட்டிப் பார்த்தது. அதுவே இந்தக் கதை உருவாகக் காரணமாக அமைந்துவிட்டது” என்கிறார் 'பெண்கள்' படத்தின் இயக்குனரான ராஜ் மருது.

இயக்குனர் மணிவண்ணனின் சீடரான இவர், தமது குருவையும், இந்தப் படத்தில் நடிக்க வைத்திருக்கிறார்.

வறட்சியும், அடிப்படை வசதிகளும் இல்லாத ஒரு கிராமத்தையே பாலியல் தொழிலாளர்களின் வசிப்பிடமாக மாற்றி விடுகிறது ஒரு சமூக விரோதக் கும்பல். இந்த கிராமத்தைப் பற்றி அறிந்து அங்கு செல்கிறார் ஒரு பத்திரிகை நிருபர். இதை அறிந்து கொண்ட தாதாக்கள் அவரை மொட்டை அடித்து அவமானப்படுத்தி உயிருடன் எரித்தும் விடுகிறார்கள். (இந்தப் பாத்திரத்தில் 'சினிமா மக்கள் தொடர்பாளர் நெல்லை சுந்தர்ராஜனை நடிக்க வைத்திருக்கிறார்கள்) இந்தக் கிராமத்தில் பிறந்த கதாநாயகி காவேரி, தனது தாய் மூலம் ஒரு கருணை இல்லத்தில் வளர்க்கப்படுகிறாள். தமது கிராமத்தின் உண்மையான முகத்தை அறியாத அவள், எதிர்பாராமல் கிராமத்துக்கே வந்துவிட, கதாநாயகியோடு ஒரு தொலைக்காட்சி செய்தி நிருபரும் கைகோத்துக் கொள்ள, கிராமத்தை எப்படி மீட்கிறார்கள் என்பதுதான் கதையாம். இது முழுக்க முழுக்க கலைப்படம் என்கிறார்கள்.



• ராஜமருது



* சினேகன்



* நெல்லை

படத்தின் ஐந்து பாடல்களை வைரமுத்துவிடம் உதவியாளராக இருந்த சினேகன் என்ற இளைஞர் எழுதியிருக்கிறார். தஞ்சை அருகேயுள்ள செங்கிப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த இவர் சன் நியூஸ் சேனலில் வரும் ஹாய் மதன் நிகழ்ச்சியின் டைட்டில் பாடலை எழுதியிருப்பவர். அத்துடன் ஒரு டஜன் படங்களில் பாடல் எழுதி வருகிறார். படத்திற்கு இசையமைத்திருப்பவர் பரத்வாஜ்.

இப்படியொரு படத்தைத் தயாரிக்க முன் வந்திருப்பவர் கே. ஸ்ரீநாத்.

"எனக்கும் சினிமாவுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. நான் ஒரு லெதர் எக்ஸ்போர்ட் வைத்திருக்கிறேன். எதிர்பாராமல் இயக்குனர் ராஜ் மருதுவைச் சந்தித்தபோது இந்தக் கதையைச் சொன்னார். கதை என்னை மிகவும் பாதித்துவிட்டது. நாமே இதைத் தயாரித்தால் என்ன என்று ஏதோ ஒரு தைரியத்தில் இறங்கி விட்டேன். இந்தப் படத்தைத் தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது என்கிறார் உறுதியாக.

'பெண்கள்' படத்தின் நாயகி திவ்யாஸ்ரீ. பாசமலர்கள், வசந்த கீதம், பாட்டு பாடவா, ராஜகுமாரன் உள்ளிட்ட பல படங்களில் குழந்தை நட்சத்திரமாக நடித்தவர்.

'பெண்கள்' படத்திற்குப் பெண்கள் ஆதரவு கொடுத்தாலே போதும். படம் நூறு நாள்தான் என்று நம்பிக்கை வைத்துள்ளார் திவ்யாஸ்ரீ.

— விஷ்ணுவல்தாசன்




"ஆபிஸ் கடிகாரம் ரொம்ப மோசமா... எப்படி?"

"காலையிலே நான் வர்றதுக்கு முன்னாலே பத்துமணி காட்டிடுது... சாயங்காலம் நான் கிளம்புன பிறகுதான் அஞ்சுமணி காட்டுது!"

- தஞ்சை தாமு

மனித உறவுகளின் சில அம்சங்களைப் பார்க்கையில் எனக்கு வருத்தமும் கோபமும் ஏற்படுவதுண்டு. அது முதலாளி- தொழிலாளி உறவாக இருக்கட்டும்; தாய்- மகன் அல்லது மகள் உறவாக இருக்கட்டும்; அல்லது எந்த இருவரின் உறவாக இருந்தாலும் சரி, ஒரு விஷயத்தை அன்பாக எடுத்துச் சொன்னால் அப்படிச் சொல்பவர்கள் அவமரியாதைக்குள்ளாக்கப்படுவதை நான் பார்த்து எரிச்சலடைகிறேன். குறிப்பாக முதலாளி தொழிலாளி உறவில் இந்த அம்சம் சற்று தூக்கலாகவே இருக்கிறது. ஒரு முதலாளி நல்லபடியாக - தொழிலாளியைச் சமமாக நடத்தினால் அது முதலாளியின் கையாலாகாத்தனம் என்று தொழிலாளி நினைத்துக் கொள்கிறான்.

'உன்னுடைய நிலைமையை நான் மதிக்கிறேன். ஏனெனில் இந்தக் கடின உழைப்புதான் இன்று நான் இருக்கும் நிலைக்கு உன்னையும் கொண்டு போகும். நானும் நேற்று உன் நிலையில் இருந்தவன்தான்' என்று ஒரு முதலாளி

**காச்மூச்**

**சுமதி - வழக்கறிஞர்**

# மனிதாபிமானத்தோடு இருப்பது தவறா?

உளப்பூர்வமாக உணர்ந்து அந்த உணர்வை வெளிப்படுத்தினால் அது சரியான முறையில் புரிந்து கொள்ளப்படுவதில்லை.

அதிகாரத் தோரணையுடன், மனிதாபிமானமில்லாமல் ஒரு வேலைக்காரனைப் போல நடத்தினால் அப்போது எஜமானன் என்ற பயம் ஏற்படுகிறது. பல சமயங்களில் இப்படிப்பட்ட அவலம் கண்டு நான் கொதிப்படைந்திருக்கிறேன்.

'நீயும் ஒரு மனிதன்; நானும் ஒரு மனிதன். இன்று நான் முதலாளியாகவும் நீ தொழிலாளியாகவும் இருக்கலாம். ஆனால் நான் பணியாளனாகவும் வேறு ஒருவர் எனக்கு எஜமானராகவும் வருவதற்கு வாழ்கையில் வாய்ப்புகள் உண்டு.'

இந்த யதார்த்தத்தைப் புரிந்து கொள்பவர்களுக்கு மனத்தில் ஒரு அமைதி ஏற்பட்டு விடுகிறது. அதனால் மற்றவர்களை மனிதர்களாக மதிக்கும் மனம் வந்துவிடுகிறது. அந்த மனிதாபிமானத்தை இயலாமை என்று கருதி 'என்னால்தான் நீ இருக்கிறாய்' என்று தவறாகப் புரிந்து கொள்பவர்களே அதிகம். அப்படியானால் மனிதாபிமானத்தோடு இருப்பதே தவறா? அதிகாரமாகவும், ஆதிபத்ய உணர்வோடும் இருப்பதுதான் சரியா என்று எண்ணக் கூடிய சக ஊழியர்களை எண்ணும்போது எனக்கும் கோபம் பொத்துக் கொண்டு வருகிறது"

- **ராணிமைந்தன்**

படம் : **வெங்கடேஷ்**

தமிழக அரசியலில் அடிக்கடி பரபரப்பை ஏற்படுத்துபவர் வாழப்பாடி ராமமூர்த்தி. அவரது தமிழக ராஜீவ் காங்கிரஸ் கட்சியிலிருந்து ஒரு கோஷ்டி திடீரென்று விலகி அ.தி.மு.கவில் ஐக்கியமாகியிருக்கிறது. இதில் ஒருவர், த.ரா.காவின் மாநில இளைஞரணி செயலாளராக இருந்த அழகுராஜ். ஏனிந்த திடீர்த் தாவல் என்பது பற்றிக் கேட்டோம்:



"காங்கிரஸ் பாரம்பரியத்திலிருந்து வந்தவன் நான். கருணாநிதி எதிர்ப்பில் உறுதியாக இருந்தவர் வாழப்பாடி. அதனடிப்படையில்தான் காங்கிரஸ் கட்சியிலிருந்து அவரின் பின்னால் ஜாதி மதங்களுக்கு அப்பாற்பட்டு நாங்கள் அணிவகுத்தோம். இன்று மதவெறியரிடமும் (வாஜ்பாய்) மகன்வெறியரிடமும் (கருணாநிதி) ஒரே நேரத்தில் சரணடைந்துவிட்டார் அவர். ஒருகாலத்துக் கொள்கைச் சிங்கம், கோபாலபுரத்துக் கூர்கா ஆகிவிட்டார்.

"வன்னியர் சங்கத்தை அவர் ஆரம்பித்திருக்கக் கூடாது! வாழப்பாடியாரின் அரசியல் சக்தி ஒரு சமுத்திரம். சிறு ஜாதியெனும் சங்குக்குள் அடைபட்டு விடக்கூடாது என்று எதிர்த்தேன். நான் கட்சி அலுவலகத்தில் இருந்தால் நீங்கள் வன்னியரா? என்று கேட்டுவிட்டுத்தான் ஒருவர் பேசுகிறார் என்றால் எப்படி அங்கு இருக்க முடியும்?

"தி.மு.க எதிர்ப்பை எங்களுக்குள் கொழுந்து விட்டு எரியச் செய்ததே அவர்தான். தி.மு.க எதிர்ப்பெனும் அந்த உக்கிரமான போரில் 1991-ல் நாங்கள் வழக்கறிஞர் சுப்பிரமணியத்தை இழந்தோம்.

"இன்னிவனவன் ஒரு கண்ணை இழந்தார். ஆனால் ஒரு சீட்டுக்காக

# "கோபாலபுரத்துக் கூர்காவாகி

தி.மு.கவிடம் தம்மை அடகுவைத்து விட்டார் இப்போது. இதெல்லாம் மனவேதனையைத் தந்தது. விலகினோம்."

காங்கிரஸ் பாரம்பரியத்திலிருந்து வந்த நீங்கள் திரும்பவும் காங்கிரஸில் சேராமல் அதிமுகவில் ஏன் சேர்ந்தீர்கள்?

"காங்கிரஸ் என்றாலே அலர்ஜியாகி விட்டது. பதிமூன்று தொண்டர்கள். பதினைந்து கோஷ்டிகள் அங்கு. என் போன்ற உழைக்கும் இளைஞர்களுக்கு காங்கிரஸால் இனி போட முடியவில்லை. அதனால்தான் அதிமுகவில் சேர்ந்தேன். இன்றைக்குத் தேசிய உணர்வு அதிகமாக இருக்கும் கட்சியும் அ.தி.மு.கதான்."

ஜாதி சங்கத்தை எதிர்த்து வந்தேன் என்கிறீர்கள் அதிமுகவுக்குக் கூட

முக்குலத்தோர் கட்சி எனும் முத்திரை விழுந்திருப்பதாகக் கூறப்படுகிறதே?

"அப்படியெல்லாம் இல்லை. அனைத்து ஜாதி மதத்தவரையும் அரவணைத்துச் செல்பவர் ஜெயலலிதாதான். இங்குதான் திருமாவளவனும் இருக்கிறார். டாக்டர் சேதுராமனும் இருக்கிறார். அம்மாவைப் பொறுத்தவரை உயர்த்திப் பிடிப்பதும் கிடையாது. போட்டு உடைப்பதும் கிடையாது. அதே போல் கருணாநிதி எதிர்ப்பிலிருந்து எந்த ஒரு விஷயத்திலும் உறுதியாக நிற்பவர் ஜெயலலிதாதான் என்பதில் எந்தவித மாற்றமுமில்லை."

சரி வாழப்பாடி ராமமூர்த்தி கருணாநிதியை விட்டு விட்டு மீண்டும் அ.தி.மு.க. அணிக்கு வந்து விட்டால் திரும்பவும் வாழப்பாடியுடன் சேர்ந்து விடுவீர்களா?

"இல்லை. வாழப்பாடி வேண்டுமானால் அடிக்கடி மாறலாம். நாங்கள் அப்படியல்ல."

'அ.தி.மு.க. ஒரு ஊழல் கட்சி; அதிகமான ஊழல்

●●

**இங்குதான் திருமாவளவனும் இருக்கிறார். டாக்டர் சேதுராமனும் இருக்கிறார். அம்மாவைப் பொறுத்தவரை உயர்த்திப் பிடிப்பதும் கிடையாது. போட்டு உடைப்பதும் கிடையாது.**

●●

வழக்குகளைச் சந்தித்து வரும் கட்சி' என்று கூறப்படும் நிலையில் அதில் எப்படி சேர்ந்தீர்கள்?

"ஊழல் ஊழல் என்று கூக்குரலிடும் கருணாநிதி குடும்பம் ஆசியாவிலேயே முதல் பத்து பணக்காரக் குடும்பங்களில் ஒன்று. பெரியாரின் விடுதலைப் பத்திரிகையில் ரூ. 3.50 மாதச் சம்பளத்திற்கு வேலை பார்த்த கலைஞர் குடும்பத்துச் சொத்து இன்று பல கோடியாக உயர்ந்திருக்கிறதே எப்படி? சன், சன் நியூஸ், சூர்யா, உதயா சேனல்கள் வந்தது எப்படி?

"இந்தப் புள்ளி விவரங்கள் பல பொதுக் கூட்டங்களில் வாழப்பாடியார் பேசிய பேச்சுக்கள்தான். இன்று மனம் திறந்து சொல்லட்டும். வாழப்பாடி மத்திய அமைச்சராக இருந்த பதிமூன்று மாதக் காலத்தில் தன் சுகபோகங்களைப் பெருக்கிக் கொள்ளவில்லையா? ஒரே ஒரு ஸ்ரீடசா, புதிய டாடா சுமோக்களைக் குட்டிப் போட்டது எப்படி?

# விட்டார் வாழப்பாடி!"

"இப்படி நான் சொல்லிக் கொண்டே போகலாம். ஊழலைப் பற்றிப் பேச இவர்களுக்குத் துளியும் தகுதியில்லை. மக்கள் மன்றம்தான் தீர்ப்பளிக்க வேண்டும்.

"1998–ல் நாடாளுமன்றத் தேர்தலில் அதிமுக கூட்டணிக்கு அதிக இடங்கள் கிடைத்தபோது வாழப்பாடியார் சொன்ன வார்த்தை என்ன...?

"மக்கள் மன்றமே ஜெயலலிதாவை நிரபராதி என்று கூறி விட்டது' என்றல்லவா சொன்னார்!"

— செ. ஏக்நாத்

# நீங்கள் கேட்டவை — தராசு

● சி. கொ.தி. முருகேசன், கோபி

*? வரும் தமிழக சட்டமன்றத் தேர்தலில் ரஜினியின் பங்கு என்னவாக இருக்கும்?*

! ❖ மௌனம் சாதித்து நடுநிலை காக்க வேண்டும் என்பது ஜெவிருப்பமாக இருக்கும்.

❖ தமக்கு பகிரங்கமாக ஆதரவு தெரிவிக்க வேண்டும் என்பது மூப்பனார் ஆசையாக இருக்கும்.

❖ மௌனம் காத்தாலும் உணர்ச்சி பூர்வமாக தம்பக்கம் இருப்பதாக ரஜினி காட்டிக் கொள்ள வேண்டும் என்பது கலைஞர் ஏக்கமாக இருக்கும்.

❖ அதிகம் பேசாமலே தாம் நடுநிலையில் இல்லை என்பதை உணர்த்துவது ரஜினியின் நோக்கமாக இருக்கும்.

• அவரவர் ஆசை!

● அ. ரஹ்மான், கம்பம்

*? ஈரோட்டில் நடந்த ம.தி.மு.க. மாநாட்டில் தங்களை மிகவும் கவர்ந்த அம்சம் எது?*

! தமது கருத்துக்கு மாறுபட்ட கருத்துள்ளவர்களையும் அழைத்து, தமக்கு ஆதரவாளர்கள் போல் காண்பித்துக் கொண்ட வைகோவின் தந்திரம்.

● வி.சிவா, மதுரை–10.

*? எமெர்ஜென்ஸி காலம்தான் தமிழகத்தின் பொற்காலம் என தமிழக காங்கிரஸ் தலைவர் இளங்கோவன் கூறியிருக்கிறாரே...?*

!தம் தவறை ஒப்புக் கொண்டு, மக்களின் மன்னிப்பைப் பெற்று, மகத்தான தேர்தல் வெற்றியும் கண்டு, மீண்டும் ஆட்சி அமைத்த இந்திரா காந்திக்கு மாபெரும் துரோகம் செய்துவிட்டார் இளங்கோவன்.

● சி. மகேஷ், சென்னை – 26.

*? கனில் காவஸ்களுக்குச் சொந்தமான லாக்கரில் லட்சக்கணக் கான ரூபாய் இருந்ததாகச் செய்தி வந்தது பற்றி....?*

## தவறுக்குத் தவறு பரிகாரம் ஆகுமா..?

! அதிர்ச்சியுடன் வருத்தமும் ஏற்பட்டது. பணத்தைக் கட்ட மறந்துபோய் லாக்கரில் வைத்துவிட்டார் என அவர் மனைவி அளித்த விளக்கம் பேரதிர்ச்சியும் பெருந்துக்கமும் அளித்தது.



• கிடைக்காத விருதுகள்!



• ரன்கள்-ரூபாய்கள்!

● பூஜா, கொசப்பேட்டை.

*? 'ஹே ராம்' திரைப்படம் மூன்று தேசிய விருதுகள் பெற்றது குறித்து...?*

! அதற்குக் கிடைத்ததைவிட அதற்குக் கிடைக்காததுதான் அதிகமாகப் பேசப்படுகிறது; சர்ச்சை கிளப்பியும் இருக்கிறது.

● கே. சண்முகம், ஆதமங்கலம்புதூர்.

*? இந்த ஈ மெயில்– இன்டர்நெட் வெப் சைட்டெல்லாம் ஒரு இழவும் புரிய மாட்டேங்குது! கொஞ்சம் விவரமாச் சொல்லு தலைவா...?*

! எல்லா விவரமும் கல்கி ஆகஸ்ட் 6 ஆண்டு மலர்ல படியுங்க!

● சி. ஈஸ்வரமூர்த்தி, சென்னை – 92. ❐

*?பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களுக்குக் கல்வியறிவும் வசதியும் ஏற்படுத்தி மதமாற்றம் செய்து விடுவது மிகத் தவறு அல்லவா?.... அதை எதிர்த்து அமைப்புகள் மேற்கொள்ள வேண்டும் என்று தாங்கள் கூறுவது என்ன*

நியாயம்? தவறுக்குத் தவறு பரிகாரம் ஆகுமா...?

! ஏழைகளுக்குக் கல்வி போதிப்பதிலும் தொழில் கற்றுத் தந்து அவர்கள் வாழ்க்கையை மேம்படுத்துவதிலும் தவறேயில்லை. அதில் மதமாற்றம் என்ற உள்நோக்கம் இருப்பதை சட்டபூர்வமாகவோ சாட்சிகளுடனோ நிருபிக்கவே முடியாது. அதனால்தான் மதமாற்றத்தைக் கண்டு கவலை கொள்வோர் மாற்று இயக்கமாக மக்களை மேம்படுத்தும் திட்டங்களை மேற்கொள்ள வேண்டும்.

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84.

? 'கழகத்தின் பீஷ்மர்' என்ற அடைமொழி கல்வி அமைச்சர் பேராசிரியர் அன்பழகனுக்கு தி.மு.கவினரால் (நெல்லை) வழங்கப்பட்டுள்ளதே...?

! ராவணன், கும்பகர்ணன் என்றெல்லாம் பட்டம் தராமல் பீஷ்மர் பக்கம் கவனம் திரும்பியதே பெரிய முன்னேற்றம்தான்!



• சர்வதேச....



'....பிரார்த்தனை

என்று ஜெயலலிதா கூறியுள்ளது பற்றி...?

! வைகோ இவருடைய கூட்டணியில் இருந்த போது இவர் இப்படிப் பேசவில்லையே! அப்போதும் வைகோ தமிழ் ஈழத்தை ஆதரித்தவர்தானே!

● வி. லக்ஷ்மிராமன், சென்னை - 73. *

? தேசிய விலங்கு புலி, தேசிய பறவை மயில்- இப்படியிருக்க ஒரிசாவில் புலிகளும் ம.பியில் மயில்களும் மாண்டுபோயிருப்பது தேசத்துக்கு அவமானமல்லவா?

! அவை தேசிய விலங்காகவும் பறவையாகவும் இல்லாதிருந்தாலும் இந்த மரணங்கள் நம் நாட்டுக்கு அவமானம்தான்; அதைவிட நமது அலட்சியமும் அறியாமையும் உலகுக்குத் தெரிய வருவதாலும் பெரும் தலை குனிவு.



* தப்பித்தார்



• பாட்டும் விருதும்!



• தந்திர மாநாடு!



• மற்றுமொரு கோஷ்டி!



• மாபெரும் துரோகம்!

□ ரூ. 50 பரிசு பெறுபவர்:
சி. ஈஸ்வரமூர்த்தி
3, வெங்கடேசநகர்
Ist மெயின் ரோட் விரிவுII
விருகம்பாக்கம்,
சென்னை - 600 092.

* ரூ. 25 பரிசு பெறுபவர்:
வி.லக்ஷ்மிராமன்
50, தனலக்ஷ்மி நகர் பிரதான சாலை,
ஸ்ரீ ராஜேஸ்வரி நகர் மேற்கு விரிவு,
சேலையூர், சென்னை-600 073

● பி. ஜெயப்பிரகாஷ், பொன்னாச்சி.

? சிவாஜி கணேசன் மீண்டும் காங்கிரஸில் சேர வேண்டும் என்று அதன் தலைவர் இளங்கோவன் அழைப்பு விடுத்துள்ளாரே...?

! சேரட்டும்! சிவாஜி கணேசன் கோஷ்டி என்று மேலும் ஒரு கோஷ்டி உருவாகும். (புதுப்பிக்கப்படும்.)

● ச. தங்கமணி, சத்திரப்பட்டி.

? இனிஸ்டனை ஜெயலலிதாவும் சசிகலாவும் சந்திக்க நேர்ந்தால் என்ன கேட்பார்கள்...?

! அமெரிக்காவில் ஏக்கர் என்ன விலை?

● கே. லக்ஷ்மணன், ஆரப்பாளையம்.

? ஈரோடு மாநாட்டில் தி.மு.கவும் ம.தி.மு.கவும் தமிழ் ஈழத்தை ஆதரித்துப் பேசியதால் அவை தடைசெய்யப்பட வேண்டும்

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? சிறந்த பாடலாசிரியர் விருதை கவிஞர் வைரமுத்து பெற்றுள்ளது பற்றி...?

! விருதுக்குரிய நபர்தான். ஆனால் விருதுக்குரிய பாடல் அதுவல்ல.

● ஆர். கிருஷ்ணமூர்த்தி, தேவூர் அஞ்சல்.

? ஒவ்வொரு நாட்டுக்கும் அதன் தேசிய அடையாளமாக, உணர்ச்சிகளை உள்ளடக்கிய தேசிய கீதம் உள்ளதைப் போல் உலக அளவில் எல்லா நாட்டு மக்களையும் ஒருங்கிணைக்கும் கீதம் இல்லையே...?

! காஞ்சி மஹா பெரியவர் இயற்றி, எம்.எஸ். ஐ.நா. சபையில் பாடிய கீதம் இருக்கிறது: 'மைத்ரீம் பஜத அகில ஹ்ருத் ஜேத்ரீ...! உலகின் சகல மக்களும் அமைதியுடனும் சிரேயஸுடனும் வாழ வேண்டும் என்று பிரார்த்திக்கும் பாடல்.





# டென்னிஸ் டெண்டுல்கர்!

**எ**ல்லோருக்கும்தான் கனவு வருகிறது சுகம் சுகமாக. ஏதாவது பலித்திருக்கிறதா? வீனஸ் வில்லியம்ஸின் கனவுக்கு ஆயுசு நூறு! இரவில் கனவு. பகலில் நனவாகி விட்டதென்றால் பாருங்களேன்?!

"ஒவ்வொரு நாள் தூக்கத்திலும் கிராண்ட்ஸ்லாம் பட்டத்தை வெல்வது மாதிரி கனவு வரும். மகிழ்ச்சியில் கதறுவேன். விழித்துப் பார்த்தால் அட கனவு... என்றாகி இருக்கும். இந்தப் போட்டியில் வென்றபோது கிள்ளிப் பார்த்துக்கொண்டேன். நிஜம்தான்! கனவு நனவாகி இருக்கிறது."

- முதன் முறையாக விம்பிள்டன் கிராண்ட்ஸ்லாம் பட்டத்தைப் பெற்றபின் வீனஸ் சொன்னபோது பார்வையாளர்கள் உம்மென்று அவர் முகத்தைத்தான் பார்த்துக் கொண்டிருந்தனர்.

பட்டத்தை பெற்ற கையோடு டென்னிஸ் கோர்ட்டின் நான்கு பக்கமும் அவர் அதை ஏந்திக் காண்பித்தபோது... என்ன ஒரு ஜொலிப்பு அவர் முகத்தில்!

பின்னே இருக்காதா? நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்குப் பிறகு ஆப்ரிக்க-அமெரிக்க கறுப்பினப் பெண் ஒருவர் கிராண்ட்ஸ்லாம் பட்டத்தைப் பெற்றிருக்கிறார் என்றால் சும்மாவா? (இதற்கு முன் அல்தியா ஜிப்சன் 1958ல் பெற்றிருக்கிறார்)

ஜூலை எட்டாம் தேதி, வழக்கமாக ஆரம்பிக்க வேண்டிய போட்டியை மழை வந்து மிரட்டியது! அடுத்த அரைமணி நேரத்தில் என்ன நினைத்ததோ? மேகம் கலைந்து புண்ணியம் சேர்த்தது.

ஒரு பக்கம் வீனஸ், மறுபக்கம் பத்து முறை வீனஸை வென்றிருக்கும் லிண்ட்சே தேவன் போர்ட். வீனஸ் தான் வெல்ல வேண்டும் என்றிருக்கிறது. அதை மாற்ற யாரால் முடியும்? சுதாரித்து ஆடிய வீனஸுக்குத்தான் இறுதியில் பட்டம்!

"ஆண்கள் ஒற்றையர் பிரிவு ஆட்டத்தை விட இதைச் சிறந்ததாகக் கருதுகிறேன்" என்றார் வீனஸ்!

**ஆ**டவர் போட்டி என்ன சும்மாவா? டென்னிஸ் டெண்டுல்கராகி இருக்கிறார் பீட் சாம்ப்ராஸ்! ஒன்று இரண்டல்ல; பதிமூன்று கிராண்ட்ஸ்லாம் ஒற்றையர் பட்டத்தைப் பெற்று புதுச் சாதனைப் படைத்திருக்கிறார் இருபத்தி எட்டு வயதான இந்த சாம்ப்ராஸ்.

இவருக்கு முன்பு பன்னிரண்டு கிராண்ட்ஸ்லாம் பட்டங்களைப் பெற்றிருந்தவர் ராய் எமர்சன்.

"சாம்ப்ராஸ் ஒரு டெரிஃபிக் சாம்பியன். அவரின் இந்தச் சாதனையை இனி யாராவது முறியடிப்பார்களா என்பது சந்தேகம்" என்கிறார் எமர்சன். அவர் சொல்வதிலும் காரணமில்லாமலில்லை. இருபதிலிருந்து இருபத்து ஐந்து வயதுக்குள் உள்ளவர்கள்தான் கிராண்ட்ஸ்லாம் பட்டத்தை வென்றிருக்கிறார்கள் இதுவரை. வயது ஆக ஆக அரையிறுதி வரை வருவதே கடினம் என்கிறார்கள்.

"உலக டென்னிஸ் வீரர்கள் தரவரிசைப் பட்டியலில் தொடர்ந்து ஆறு வருஷம் முதலில் இருந்தவர் சாம்ப்ராஸ் ஒருவர்தான். அவர் இன்னும் பல பட்டங்களைப் பெற்று சாதனையாளராகத் திகழ்வார்" என்கிறார் எமர்சன்.

— ஏக்ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# நினைத்ததை நிறைவேற்றும் அற்புத 90 XXX பிரமிட் இயந்திரம் (WISH PYRAMIDS)




அற்புத மனிதர் **M.G. அண்ணாதுரை** அவர்களால் சக்தியூட்டப் பெற்ற அதிசய எந்திரம். இதன் நடுவில் உள்ள ஒன்பது பிரமிட் அமைப்பில் உங்கள் கோரிக்கைகளை சிறிய பேப்பரில் எழுதி வைத்து காலை மாலை நினைவுபடுத்த எளிதில் நினைப்பது நிறைவேறும்.

செல்வ வளம் பெற, வாழ்க்கை உயர, விரைவில் திருமணம் நடைபெற, குடும்பத்தில் சச்சரவு நீங்க, நோய்கள் அகல, நினைவாற்றல் அதிகரித்து அதிக மதிப்பெண் பெற, வீட்டில் அற்புத சக்திகள் சூழ, வாஸ்து தோஷங்கள் நீங்க யாவற்றிற்கும் உதவும் அதிசய சக்தி வாய்ந்தது.

| | |
|---|---|
| 90 XXX பிரமிட் (கிரிஸ்டல் உள் அமைந்தது) விலை | ரூ. **150/-** |
| நவரத்தினத்துடன் கிரிஸ்டல் அமைந்த அதிக சக்தி உள்ளது | ரூ. **900/-** |
| விசேஷயந்திரம் நவரத்தினம் மற்றும் சக்தி ஊட்டப்பெற்ற 90 XXX பிரமிட் விலை | ரூ.**1500/-** |

தேவையுள்ள கருவியுடன் தபால் செலவு ஒன்றிற்கு ரூ. 30 சேர்த்து
D.D. அல்லது M.O. மூலம் பெறலாம்.

**இலவசம்**

இந்த
விளம்பரத்தை
கத்தரித்து 31.8.2000க்குள்
பிரமிட் வாங்குபவர்களுக்கு
5 மைக்ரோ பிரமிட் இலவசம்.

## பயனடைந்தவரின் பாராட்டுரைகள்

- அருட்கடல் அரசர் அண்ணாதுரை அவர்களுக்கு தாங்கள் அனுப்பிய பிரமிட் பார்சலை பிரிக்கும்போது கறுகறுவென ஓர் அற்புத சக்தி கைகளில் பரவியது எகிப்த்திற்கே சென்று பிரமிட்டை பார்த்து அதனுள் இருந்தது போல் உணர்வும் உற்சாகமும் கிடைத்தது. வாழ்க நீவிர்.

  **ஸ்ரீலஸ்ரீ K.K.V.P. கோவிந்த ராஜ பவனாச்சார்ய சுவாமிகள்**
  **பவனாச்சார்ய மட பீடாதிபதி, ஸ்ரீரங்கம், திருச்சி.**

- ஆசிரியர் அவர்களுக்கு தங்கள் பிரமிட் அமைப்பின் உதவியால் சென்னையில் உள்ள மதர் கப்பீரியர் அவர்களுக்கு உடல் நலம் பாதிப்பில் உள்ள போது தஞ்சையில் இருந்து பிரார்த்தித்தேன். சில மணிகள் பின் தொலைபேசியில் விசாரித்ததில் உடல் நலம் நல்ல முன்னேற்றம் கிடைத்ததாக கூறினார்கள். எங்களைச் சார்ந்த பல தூய சகோதரிகள் பிரமிட் ஆற்றலை கண்டு வியக்கின்றனர்.

  **Dr. தூய சகோதரி மேரி லூக் M.A., B.T., மாற்று மருத்துவர்,**
  **புனித கமிலஸ் மருத்துவமனை, சுங்குவார் சத்திரம், முளச்சூர் - 602 106.**

- அன்பிற்குரிய ஐயா அவர்களுக்கு, இரவு 9.15 மணிக்கு என் மனதில் உடனடியாக சென்னையில் உள்ள குடும்பத்தினருடன் தொடர்பு கொள்ள வேண்டும் என அதீத உணர்வு உண்டானது. தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். என் மகள் பிரமிட் சக்தியை பரிசோதனை செய்ய, இரவு 9 மணி அளவில் எழுதி வைத்து நினைத்தேன். நீங்களும் தொடர்பு கொண்டீர்கள் என கூறினாள். உண்மையிலேயே இது ஓர் அற்புத சக்தியுள்ள அதிசயம்தான். எனக்கு தெரிந்து பலருக்கு தங்களின் கிரிஸ்டல்களும் பிரமிடுகளும் பல தீராத பிரச்னைகளைத் தீர்த்து உள்ளது. நன்றி வணக்கம்.

  **S.சுப்ரமண்யம், லேபர் ஆபீஸர், பெரியகுளம், தேனி மாவட்டம்.**



*மொத்த விற்பனைக்கு :*

**M.G.அண்ணாதுரை,** 60, ஜீவன் லால் நகர், திருவொற்றியூர்,
சென்னை - 600 019. போன் : 5735207, 5730074

**எங்களது பெங்களூர் விற்பனை நிலைய**
**தொலைபேசி எண் : 3436734, 3433545**

*கிடைக்குமிடம் :*

## ஹீலிங் மேக்னெட்ஸ் & கிரிஸ்டல்ஸ்

நெ.10, கோபால கிருஷ்ண அய்யர் தெரு, பாண்டிபஜார்,
தியாகராய நகர், சென்னை - 600 017. போன் : 8218268

**எங்களிடம் தரமான காந்த சிகிச்சை கருவிகளும் கிடைக்கும்.**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka